

ஸ்வாமி தேசிகன் அருளிய

# ஸ்ரீ கோபாலவிம்சதி

ஸேவா ஸ்ரீநிவாஸராகவார்ய மஹாதேசிகன்
விளக்கவுரையுடன்



ஸ்வாமி தேசிகன் அருளிய

# ஸ்ரீ கோபாலவிம்சதி

ஸேவா ஸ்ரீநிவாஸராகவார்ய மஹாதேசிகன்
விளக்கவுரையுடன்

ஸ்ரீ உ.வே. பிள்ளைபாக்கம்
வாஸுதேவாசார்யர் ஸ்வாமியின் ஸப்ததி
மஹோத்ஸவத்தில் வெளியிடப்பட்டது.
(08.05.2010)

# முன்னுரை

(ஸ்ரீ வேதாந்த தேசிக ஆராய்ச்சி மையத்தின் மூலம் பல வருடங்களுக்கு முன் ஏழு பாஷைகளில் வெளியிடப்பட்ட பொழுது ஸேவா ஸ்வாமி அருளிய முன்னுரை).

இன்று ஸ்வாமி தேசிகன் அருளிச்செய்த கோபால விம்சதி என்கிற திவ்யமான ஸ்தோத்திரத்தை ஏழு பாஷைகளில் ஸ்ரீவேதாந்த தேசிக ரிஸர்ச் செண்டர் வ்யாக்யானத்துடன் வெளியிட்டு நிறம் பெறுகிறது. ஸம்ப்ரதாயஸ்தர்கள் ஆஸ்திகர்கள் இந்த ஸ்தோத்திரத்தைப் பெற்றுக் கொண்டு கோபாலனின் கருணைக்குப் பாத்திரமாக வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேன்.

கஷ்டப்பட்டு உழைத்துப் பலனை அடைவதை யாரும் விரும்புவதில்லை. ஸுலபமாக பெரிய லாபத்தை அடைந்துவிட வேண்டுமென்று நினைப்பது ஸஹஜமாகி விட்டது. இயற்கையின் இந்த போக்கை உணர்ந்த ஸ்வாமி தேசிகன் பல ஸ்தோத்ரங்களை நமக்கு சேம வைப்பாக கொடுத்திருக்கிறார். மனதில் நிம்மதி, வாக்கில் தூய்மை, உடலில் தெம்பு முதலியன ஏற்பட்டால் அல்லது வாழ்க்கை சீரடையாது என்பதையும் திருவுள்ளத்தில் கொண்டு லகுவான வழிகளை வகுத்தளித்தார் ஸ்வாமி தேசிகன். இதை தளமாகக் கொண்டு பல ஸ்தோத்திரங்களில் பல வகையான பலன்களைக் குறிப்பிடுகிறார்.

கவிதார்கிக சிங்கம் என்று அக்காலத்தில் சிங்கம் போன்றவர்களால் அழைக்கப்பட்டவர் ஸ்வாமி தேசிகன். இவரது கவித்திறம் கல்பனைக்கு அப்பாற்பட்டது. கவிலோகம் வியந்தது. இவரது படைப்புகளில் காணும் கவிநயம் வேறெங்கும் காண்டற்கரியது. ஸ்தோத்ரங்களில் தெய்வ மணம் கமழ்கின்றது. கவிதாநயமும் ஓங்கி நிற்கிறது.

கலையுலகம் காணாத கற்பனைகளும் புதுமைகளும் இவரது படைப்பின் தனித்தன்மைக்குச் சான்றுகள்.

ஒரொன்று தானே அமையாதோ இத்தாரணியில் வாழ்வார்க்கு வானேறப் போமளவும் வாழ்வு என்று தானே தீர்ந்த உள்ளத்தர் ஈடுபட்டுப் பாடியது.

பாமரர்களும் எளிதில் புரிந்து கொள்வதாய், பண்டி- தர்களுக்குப் பெருவிருந்தாய், பக்திமான்களுக்குப் பொக்கிஷமாய், யோகிகளுக்கு ஓர் ஒளிவிளக்காய், ரஸிகர்களுக்குத் தேன் சுனையாய், தெவிட்டாத

ஆனந்தத்திற்கு ஓர் கற்பகமாய் அமைந்தவை ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகள்.

ஸ்வாமியின் க்ருஷ்ணாநுபவம் விலக்ஷணம். ஈடுபாடும் இணையற்றது. யாதவாப்யுதயம் என்கிற மஹா- காவ்யத்தைப் படைத்தார். ஸங்க்ரஹருசிகளுக்கு இந்த கோபாலவிம்சதியை அளித்தார். இது ஒரு சிறந்த ரத்னம். இதைப் பல கோணங்களில் பார்த்தால் தான் இதன் பெருமையை அறிய இயலும். பல தேசத்தவரும், பல மொழிக்காரர்களும் பல சித்தாந்திகளும் பலகாலும் படித்துப் பயன்பெற வேண்டுமென்ற அவாவினால் பலதரப்பட்ட அறிவுடையோரைக் கொண்டு இந்த ஸ்தோத்திரத்தைப் பல மொழிகளில் தருகின்றோம்.

இதில் உள்ள சில விஷயங்களை இங்கு குறிப்பிடுவது தேவை தானே ! பல விஷயங்கள் பல கோணங்களில் காணப்படுகின்றன.

1. வல்லவீஜனவல்லபம் என்று முதல் ச்லோகத்திலும் வல்லவீவல்லபோ ந: என்று 20வது ச்லோகத்திலும் குறிப்பிடப்படுகிறது. இதை குறிப்பில் கொள்ள வேண்டும்.

2. யுவாநம் என்று 8வது ச்லோகத்தில் தொடங்கி முடிவு வரை யுவானுபவமே.

(1) யமுனா ஸாக்ஷிக யௌவனம் யுவாநம், (2) அஜஹத்யௌவநம், (3) மஹிலாதீந புஜாந்தரஸ்ய யூந:, (4) திவாகரோ யுவா, (5) கௌமாரஹாரீ என்று ஐந்து இடங்களில் நித்ய யுவாவை, கோகுல யுவாவாக அனுபவிக்கிறார்.

3. ஸ்மிதம் :- சிரிப்பு என்று பொருள். இதன் வகைகளைப் பார்ப்போம். (1) மந்தஹாஸம் - பூதநா ப்ரவேசத்தில் மந்தஹாஸம். (2) ஸ்மிதபுல்லாதரபல்லவம்- உரலை இழுப்பதில், அர்ஜுன மரங்களை மாய்த்து சாபவிமோசந காலத்தில். (3) அநகஸ்மிதம் - அபாங்கங்களை ப்ரார்த்திக்கின்ற பொழுது, தூயதான சிரிப்பு, அதனால் குளிர்ச்சி. (4) லீலாஸ்மேர: - விளையாட்டுச் சிரிப்பு, கோபிகளின் வஸ்த்ராபஹரணத்தில், தான் யாசிப்பதில்.

4. உதடுகளின் அனுபவம்:- (1) ஸ்புரிதாதரோஷ்டம், பால் சாப்பிடும் வேகத்தில், (2) ஸ்மிதபுல்லாதரபல்லவம் - பயந்த நிலையில், மரங்களை மாய்ப்பதில், (3) அருணாதர ஸாபிலாஷவம்சாம் - சிவந்த உதடுகள், புல்லாங்குழலையும் ஈர்க்கின்ற நிலை, (4) அதரமணி-ஸுதாயாம் அம்சவாந் - விஷ்ணுவின் அதரானுபவம்.

5. புல்லாங்குழலின் பெருமை:- (1) மேகலா- தத்தவேணு: - அரையில் சொருகிய புல்லாங்குழல். (2) அம்சவான் வம்சநாள: - இடம் பிடித்தது புல்லாங்குழல். (3) மஞ்ஜு வேணவே - இனிமையான புல்லாங்குழல். (4) வம்சநாளை: - புல்லாங்குழல்களால். (5) ஸாபிலாஷ- வம்சாம் - ஆசைப்படும் புல்லாங்குழல்.

6. வெற்றி - ஜயதி :- (1) வல்வவ சக்ரவர்த்தீ ஜயதி (2) வம்ஶநாள: ஜயதி (3) கிதவ: ஜயதி, (4) கோபகந்யா புஜங்க: ஜயதி, (5) லீலாஸ்மேர: ஜயதி.

7. பார்வைகள் :-

(1) ப்ர-ஸம்-ஈக்ஷமாண: - தனது திருமேனி வர்ணனத்தில் ஆதராதிசசியத்துடன் ஈடுபட்டதைக் கண்டு களிப்பிஞல் தம்பால் ஆதரம் பெருகவைக்கும் பார்வை.

(2) ப்ர-ஈக்ஷமாண: - அன்புக் காதலியைப் பார்க்கும் பொழுது உன்னிப்பான பார்வை.

(3) ஸம்-ஈக்ஷதே - நன்ருக காணலாம். இதன் கருத்து, நேரிடையாகவே ஸேவிக்லாம் என்பது.

(4) நிகடேஷு நிஶாமயாமி - அருகிலேயே பார்க்கிறேன்.

(5) அநிமேஷநிஷேவணீயம் அக்ஷ்ணோ:- இமைக் கொட்டாமல் இரண்டு கண்களாலும் பார்க்கத்தக்கது.

(6) அபாங்கை : - அவது, கடைக்கண்களால் காப்பாற்றட்டும்.

(7) அகிலாந் அவலோகயாமி காலாந் - எப்பொழுதும் பார்க்கிறேன்.

(8) த்ருச்யம் கிமபி ப்ரம்ஹ.

8. லலிதம் - லலிதாம் ஹாரயஷ்டிம், லலிதவ்ருத்திம் லலித:, லலிதாம் குந்தஶாகாம்.

**இவ்வண்ணம் பல கோணங்களில் இத்துதியின் பெருமையை ஸேவித்தோம். விநிர்மிதாம் என்பதும் ரஸம். விசேஷ ச்ரத்தா பக்தியுடன் இத்துதியின் நிர்மாணம் என்றும் வேங்கடேச கவி நிர்மதா என்றும் கூறியது ரஸம்.**

**இத்துதியை எல்லோரும் படிக்க வேண்டும். கோபால ஸேவாஸௌபாக்யத்தைப் பெறவேண்டுமென்று வேண்டிக் கொள்கிறேன்.**

## ஸ்வாமி தேசிகன் அருளிய

# ஸ்ரீ கோபால விம்சதி

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி

வந்தே ப்ருந்தாவநசரம் வல்லவீஜநவல்லபம்
ஜயந்தீஸம்பவம் தாம வைஜயந்தீவிபூஷணம்

வாசம் நிஜாங்கரஸிகாம் ப்ரஸமீக்ஷமாண :
வக்த்ராரவிந்த விநிவேஸித பாஞ்சஜந்ய :
வர்ண த்ரிகோண ருசிரே வரபுண்டரீகே
பத்தாஸநோ ஜயதி வல்லவசக்ரவர்த்தீ

ஆம்நாய கந்தி ருதித ஸப்புரிதாதரோஷ்ட்டம்
ஆஸ்ராவிலேக்ஷண மநுக்ஷண மந்தஹாஸம்
கோபாலடிம்பவபுஷம் குஹநா ஜநந்யா:
ப்ராணஸ்தநந்தய மவைமி பரம் புமாம்ஸம்

ஆவிர்ப்பவத்வநிப்ருதாபரணம் புரஸ்தாத்
ஆகுஞ்சிதைக சரணம் நிப்ருதாந்யபாதம்
தத்நா நிமந்த்தமுகரேண நிபத்ததாளம்
நாதஸ்ய நந்தபவநே நவநீதநாட்யம்

ஹர்த்தும் கும்பே விநிஹிதகர: ஸ்வாது ஹையங்கவீநம்
த்ருஷ்ட்வா தாமக்ரஹண சடுலாம் மாதரம் ஜாதரோஷாம்
பாயாதீஷத் ப்ரசலிதபதோ நாபகச்சந் ந திஷ்ட்டந்
மித்யாகோப : ஸபதி நயநே மீலயந் விச்வகோப்தா

வ்ரஜ யோஷிதபாங்கவேதநீயம்
மதுராபாக்ய மநந்ய போக்ய மீடே
வஸுதேவவதூஸ்தநந்தயம் தத்
கிமபி ப்ரஹ்ம கிசோரபாவத்ருச்யம்

பரிவர்த்திதகந்தரம் பயேந
ஸ்மித-புல்லாதர-பல்லவம் ஸ்மராமி
விடபித்வநிராஸகம் கயோஸ்சித்
விபுலோலூகலகர்ஷகம் குமாரம்

நிகடேஷு நிசாமயாமி நித்யம்
நிகமாந்தை ரதுநாபி ம்ருக்யமாணம்
யமளார்ஜுந த்ருஷ்ட பால கேளிம்
யமுநா ஸாக்ஷிக யௌவநம் யுவாநம்

பதவீ மதவீஸீயம் விமுக்தே :
அடவீ ஸம்பத மம்புவாஹயந்தீம்
அருணாதர ஸாபிலாஷ வம்சாம்
கருணாம் காரணமாநுஷீம் பஜாமி

அநிமேஷ நிஷேவணீய மக்ஷ்ணோ :
அஜஹத் யௌவந மாவிரஸ்து சித்தே
கலஹாயித குந்தளம் கலாபை :
கரணோந்மாதக விப்ரமம் மஹோ மே

அநுயாயி மநோஜ்ஞ வம்சநாளை:
அவது ஸ்பர்சித வல்லவீ விமோஹை:
அநக ஸ்மித சீதளை ரஸௌ மாம்
அநுகம்பா ஸரிதம்புஜைரபாங்கை:

அதராஹித சாரு வம்ச நாளா:
மகுடாலம்பி மயூர பிஞ்ச்ச மாலா:
ஹரிநீல சீலா விபங்க நீலா :
ப்ரதிபா ஸ் ஸந்து மமாந்திம ப்ரயாணே

அகிலாநவலோகயாமி காலாந்
மஹிளாதீந புஜாந்தரஸ்ய யூந :
அபிலாஷபதம் வ்ரஜாங்கநாநாம்
அபிலாபக்ரமதூரமாபிரூப்யம்

ஹ்ருதி முக்த சிகண்ட மண்டந :
லிகித : கேந மமைஷ சில்பிநா
மதநாதுர வல்லவாங்கநா -
வதநாம்போஜதிவாகரோ யுவா

மஹஸே மஹிதாய மௌளிநா
விநதேநாஞ்ஜலி மஞ்ஜநத்விஷே

கலயாமி விமுக்தவல்லவீ
   வலயாபாஷித மஞ்ஜுவேணவே

ஜயதி லளித வ்ருத்திம் சிக்ஷிதோ வல்லவீநாம்
   சிதில வலய சிஞ்ஜா சீதளர் ஹஸ்த தாளே:
அகில புவன ரக்ஷா கோப வேஷஸ்ய விஷ்ணோ:
   அதர மணி ஸுதாயா மம்சவாந் வம்சநாள:

சித்ராகல்ப: ச்ரவஸி கலயந் லாங்கலீ கர்ணபூரம்
   பர்ஹோத்தம்ஸஸ்ப்புரித சிகுரோ பந்துஜீவம் ததாந:
குஞ்ஜாபத்தா முரஸி லளிதாம் தாரயந் ஹாரயஷ்டிம்
   கோபஸ்த்ரீணும் ஜயதி கிதவ: கோபி கௌமாரஹாரீ

லீலாயஷ்டிம் கரகிஸலயே தக்ஷிணே ந்யஸ்யதன்யாம்
   அம்ஸே தேவ்யா: புளகருசிரே ஸந்நி விஷ்டாந்யபாஹு:
மேகச்யாமோ ஜயதி லளிதோ மேகலா தத்தவேணு:
   குஞ்ஜாபீடஸ்ப்புரித சிகுரோ கோபகந்யா புஜங்க:

ப்ரத்யாலீடஸ்த்திதிமதிகதாம் ப்ராப்தகாடாங்க பாளிம்
   பஸ்சாதீஷந் மிளிதநயநாம் ப்ரேயஸீம் ப்ரேக்ஷமாண:
பஸ்த்ராயந்த்ரப்ரணிஹிதகரோ பக்தஜீவாது ரவ்யாத்
   வாரிக்ரீடா நிபிடவஸநோ வல்லவீவல்லபோ ந:

வாஸோ ஹ்ருத்வா திநகர ஸுதா ஸந்நிதௌ வல்லவீநாம்
   லீலாஸ்மேரோ ஜயதி லளிதாமாஸ்த்தித: குந்தசாகாம்
ஸவ்ரீடாபிஸ் ததநு வஸநே தாபிரப்யர்த்த்யமாநே
   காமீ கஸ்சித் கரகமலயோர் அஞ்ஜலிம் யாசமாந:

இத்யநந்ய மநஸா விநிர்மிதாம்
   வேங்கடேச கவிநாஸ்துதிம் படந்
திவ்ய வேணு ரஸிகம் ஸமீக்ஷதே
   தைவதம் கிமபி யௌவத ப்ரியம்

கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாண குணசாலிநே
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம:

ஸ்ரீ:

# ஸ்ரீ கோபாலவிம்சதி

श्रीमान् वेङ्कटनाथार्य : कवितार्किककेसरी ।
वेदान्ताचार्य वर्यो मे सन्निधत्तां सदा हृदि ॥

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி

वन्दे बृन्दावनचरं वल्लवीजनवल्लभम् ।
जयन्तीसंभवं धाम वैजयन्तीविभूषणम्

வந்தே ப்ருந்தாவநசரம் வல்லவீஜநவல்லபம்
ஜயந்தீஸம்பவம் தாம வைஜயந்தீவிபூஷணம் (1)

ப்ருந்தாவநசரம் வல்லவீ ஜநவல்லபம் ஜயந்தீ ஸம்பவம் । வைஜயந்தீ விபூஷணம் தாம வந்தே என்று வரிசை படுத்திப் பொருள் கொள்ள வேண்டும்.

ப்ருந்தாவனத்தில் ஸஞ்சரிப்பதும், வல்லவீ ஜனங்- களுக்கு (கோபிகளுக்கு) பரம ப்ரியமானதும், ஜயந்தியில் தோன்றியதும், வைஜயந்திமாலையை அணிகலமாக உடையதுமான ஒரு ஒளியை நான் வணங்குகின்றேன் என்று பொருள்.

பிள்ளையின் பிள்ளை பிள்ளை விஷயமாக இருபது பாடினார். அப்பிள்ளையும் எடுத்தாற்கையில் பிள்ளையாய் விளங்கிய இடைப்பிள்ளை விஷயமாக இருபது பாடினார். அவ்விருபது தான் கோபால விம்சதி.

கோபாலன், புவியைக் காக்க வந்தவன், கௌர் பூத்வா. அச்ருமுகீ என்றார் சுகர். பசுபதி என்னுமாப்போலே ஸங்கு சிதமாகவும் ஸந்திக்தமாகவும் இல்லாமல் தன்னேற்ற முடையது இந்த கோபால சப்தம். ஆதலால் கோபாலன் என்ற திருநாமம் கண்ணனையே குறிக்கும்.

ஓரிடத்தில் உள்ள ஒரு பசுவை காப்பது பெரிதன்றே ! ஆயர்பாடியில் ஆவினைக்காத்தான் எனின் கவாம் அங்கேஷு திஷ்ட்டந்தி புவநாநி சதுர்தஶ என்பதற்கு இணங்க 14 லோகங்களையும் தொடர்ந்து சென்று காத்தான் என்பதன்றோ ஏற்ற பொருள் ! அகில புவந ரக்ஷாகோபன் என்பர் ஸ்வாமியும்.

கோபாலன், கோமகன். அவன் காமகன் என்றாள் கோதை. வேதத்தைக் காப்பது அவன் தொழில். ஸர்வ உபநிஷதோ காவ : என்றனர். ஆக அவன் உபநிஷத் பாலகனானன். கோபாலனாய் குடியேறியவன் தனது தொழிலை நழுவாது செய்கிறான். கோகுலத்தில் தான் கோபியரிடம் கற்ற கல்வியை பெரும் போரிலே தேரிலே ஏறி அமர்ந்து பார்த்தனுக்குப் பாடமாகப் போதித்து பார்த்தனை உய்வித்தான் - கீதை பிறந்தது, வேதம் உயிர்பெற்றது. இதனாலன்றோ கண்ணன் கோபாலன் !

மற்றும் இவன் கோபர்களால் நன்கு சீராட்டப் பெற்றவன். கோபர்கள் புலன்களை அடக்கியவர்கள். ஆக கோபாலன் கோபாலனாயிருக்க இருபது பாடப்படுகிறது, கோபாலன் 18 படி பாடினான். மேலும் இரண்டுபடி ஏற்றம் இக்கோபால விம்சதிக்கு, கோபாலன் விஷயமாக இங்கு இருபது பாடியது 24 ஸர்க்கமாக அப்யுதயமாயிற்று. அதுவே காவ்யரத்தினம். க்ஷேமதம் காவ்யரத்னம் என்பர் ஸ்வாமி. யோகக்ஷேமம் வஹாமி என்றான் கோபாலன். அவன் துதியான கோபால விம்சதி யோகத்தையும், அவன் அப்யுதயம் க்ஷேமத்தையும் கொடுக்கின்றது. அவன் செய்ய நினைப்பதை இரண்டுமே செய்யும் போலும். ஸாக்ஷாத்காரம் யோகபலமாமன்றோ!

கோபால விம்சதியில் அடங்கியிருக்கும் ஆழ்பொருளை ஆரே அறிவார் ! அவரவர் தாம் தாம் அறிந்தவாறு ஒருவாறு ஓரிரண்டு பொருள்களைக் கண்டு வியப்பதன்றி வேறு நிலையில் புலவர் பேசுவதும், பேதையர் பேசுவதும், வேதியர் பேசுவதும் வாதியர் பேசுவதும் எவ்வளவு- தாகும். நசை நம்மை விட்டபாடில்லை. அதனாலன்றோ வண்டின் நிலையில் கிண்டுகின்றோம் இவ்விருபது மலர்களை.

ஒரொன்று தானே அமையாதோ என்று வியந்துப் போந்தனர். பலர் கண்டும், பலர் கொண்டும் களித்தனர். அவ்வழியே சென்று நாமும் களிப்போம்.

முத்து முத்தாக கிடைக்கும் நற்பொருளைக் காட்டுவது இந்த வ்யாக்யானத்தின் குறிக்கோள். ஶ்லோகங்களின் அடைவையும் சுவையையும் வேணு ரஸிகன் அருளால் குறிப்பிடுவோம். இதைக் கண்ட தேசிகனடியார்கள் செருக்குக் கொண்டால் அதைப் பெரும் பேருக எண்ணுவோம்.

வந்தே என்று தொடக்கம். யௌவதப்ரியம் என்று முடிவு. இணைத்தால் யௌவதப்ரியம் வந்தே-என்று ஏக வாக்யமாகும். உபாயம் முதல் சுலோகத்தில் பலம் ஸமீக்ஷணம்-ஸாக்ஷாத்காரம்-இறுதியில்.

வந்தே என்று அம்ருத பீஜத்தில் உபக்ரமம். அம்ருத ரஸம் க்ரந்தம் பூராவும்.

இங்கு ஒரு சில விஷயங்கள்

இந்த ச்லோகத்தில் உத்தரார்த்தம் பூர்வார்த்தமாக மாறினுல் வ்ருத்தமும் சுவையும் உண்டே ! சரித அடிப்படையில் அமைவது அழகன்றே ? என்ற எண்ணம் எழுவது இயற்கை. ஸ்வாமி இவ்வாறு அனுஸந்திக்கக் காரணம் தான் என்ன ? இங்கு ஸஹ்ருதயர்கள் ஸந்நிதியில் ஒன்று விண்ணப்பிக்கப்படுகிறது.

இங்கு எம்பெருமானின் அவதாரமும் அதன் ரஹஸ்யமும் குறிப்பிடப்படுகிறது.

மங்களாசாஸனம் செய்யும் மரபன்றோ நம்முடையது ! கோபிகள் 'அத்தத்தின் பத்தாம் நாள் தோன்றிய அச்சுதன்' என்றும், : நேரில்லை காண் திருவோணத்தான் ' என்றும் அவன் பிறந்த ரோஹிணியை-நக்ஷத்திரத்தை-மறைத்தனர். கோபியர் நிலையை ஆஸ்த்தானம் பண்ணின கோதையும் தொடக்கத்தில் ஆயுதத்தை மாற்றிக் கூறினுள். தேவகிப் பிராட்டியும் அவன் ரூபத்தை மறைக்க வேண்டினுள். கர்கரும் நாமத்தை மறைத்தார். இவ்வழியில் ஸ்வாமியும் அவதார காலமான ஜயந்தியை எடுத்த எடுப்பிலேயே கூருமல் அபிவ்யக்தி க்ஷேத்திரமான ப்ருந்தாவனத்தை முற்பட மொழிந்தார். இவையெல்லாம் மங்களாசாஸன ப்ரகாரங்கள் !

அவதார ரஹஸ்யம் அடங்க இதில் உள்ளதை உள்ளுவோம். அவன் மொழிந்த கீதையில் அவன் தோன்றக் காரணத்தை பரித்ராணய என்று தொடங்கி அருளிச்செய்தான். ஸாதுக்களைப் பரித்ராணம் செய்வது அவதார ப்ரதான லக்ஷயம். பஹு வசனத்தை

ப்ருந்தம் என்ற சொல் கூறும். கூட்டங்களை அவனம்-ரக்ஷிக்க- ஸஞ்சரித்- தான் என்பது முதற் பாதமான ப்ருந்தாவனசரம் என்பதால் கூறப்படுகிறது. குற்றமொன்றில்லாத கோவலர்கள் ஆதலால் அங்கு ஸஞ்சாரம். கூட்டம் கூட்டமாக அழித்தது முன் அவதாரத்தில். 'சதுர்தஶ ஸஹஸ்ராணி' என்பதையும், 'ஸமித்ரக்ஞாதிபாந் தவம்' என்பதையும் நினைக்க. இங்கோ சரணடைந்தான். தன் முன்னே சென்ற ஆயர் சிறுவர்களை அகாஸுரன் முழுதுமாக விழுங்கியிருக்க, அனைவரும் மாண்டதைக் கண்டு தம்மவரைத் தாமன்றே காக்க வேண்டுமென்று முனைந்து அஜகரனைக் கொன்று உறங் குவார்போலே கிடந்த பிள்ளைகளைக் கருணை பொழிந்த கடாக்ஷங்களைக் கொண்டு உயிர் பெறச் செய்தான் என்றார் சுகர். ஆதலால் கண்ணன் ப்ருந்தாவனசரன். ஸ்வாமியும் ப்ருந்தாநி ய; ஸ்வவஶயந் வ்ரஜஸுந்தரீணும் ப்ருந்தா வனுந்தரபுவாம் ஸுலபோ பபூவ என்றார்.

கோபிகளைக் கூட்டம் கூட்டமாகவன்றே அவன் கூட்டியது. கணக்கில்லாத பெண்கள் கூடிச்சென்று தனக்கே கண்ணன் கணவனுக வாய்க்க வேண்டும் என்று வேண்டினர். அனைவருக்கும் தானே பலன் கிட்டியது ! ப்ருந்தமாக ரக்ஷிப்பதில் இவன் இணையற்றவன். அதற்குக் குருகுலவாஸமாக அமைந்த இடத்துக்கு ப்ருந்தாவனம் என்றே திருநாமம். அதனுல் தானே அவன் பெரியவனுன பொழுது பதினுராயிரம் பெண்டிரைச் சிறைவிடுவித்து ஒரே சமயத்தில் மணந்து அவனம் செய்தது ! அவனம் த்ராணம்-ப்ருந்தாவனம் பரித்ராணம். சரம் என்கிருர். வ்ரஜமென்ற திருநாமம். நின்றதும், இருந்ததும் கிடந்தது மன்றிக்கே. நடந்த நிலையைப் பேசுகிருர். நடந்தான் என்ருல் கெடுமாமிடர். கோப்ராம்ஹணப்ருந்தங்கள் நலிந்துநிற்க அவற்றைக் காக்கவே மதுரையினின்றும் புறப்பட்டு வந்தது. இதற்கு ச்ரியப்பதித்வம் தேவையாத- லால் பிராட்டி பல உருவங்களை எடுத்து நிற்க அவர்களை மணந்து அவனகாரியத்தில் வெற்றிபெற்ருன் போலும். 'ஸ்த்ரீநாம்நீர் லக்ஷ்மீர் மைத்ரேய' என்ருர் பராசரரும்:

'ஜயந்தீ ஸம்பவம்' என்பதின் சுவை அலாதியானது. தாய் தகப்பன் பேர்களையும், வளர்ப்பு தாய் தகப்பன் பேர்களையும் சொல்லாமல் ''ஜயந்தீ என்று கூறியதில் பலவிதமான வெற்றி உண்டு. 'யுகே யுகே' என்று காலத்தையே குறித்தார் கீதையில். 'யதா யதாஹி' என்பதும் அதையே வலியுறுத்துகிறது. ஆதலால் வாய்த்த காலத்- தையும் வாயாறப் பேசுகின்ருர். இவனே மூன்று பிறவிகளில்

தோன்றியதுண்டு. நால்வர்களைத் தாய்மார்களாகக் கூறியதும் உண்டு. 'ஜயந்தீ' என்பது அவ்வாறன்றிக்கே க்ருஷ்ணாவதாரத்தையே குறிக்கும் பாங்குடையது என்பதையும் குறிப்பிட்டபடியாம். 'ஸம்பவாமி' என்ற சொல் நன்றே அமைந்தது. அதையே ஸம்பவம் என்று கூறுகிறார். வைஜயந்தீவிபூஷணம். வெற்றியைக் காட்டிய கொடியாதலால் துஷ்க்ருத்விநாசம் அர்த்தஸித்தம். ப்ருந்தாவனத்தில் அவன் செய்த துஷ்க்ருத் விநாசம் கம்ஸனுக்கும் புலனாகாது தவித்தான். அதை வெளிப்படையாகக் கூறாமல் 'வைஜயந்தி' என்ற சொல்லில் சொருகிவைத்திருப்பது கண்கூடு. வனசரனானதால் வைஜயந்தி வனமாலை. தாம என்பதன் பொருள் அதி விலக்ஷணம். தாய் சொல்வார்த்தை தருமம். "இத்தேஜோ மயமான உருவத்தை, 'மானிடவர்க்குப் புலனாக்காதே'' என்றாள் தேவகி. தான் பெற்ற பேற்றினை எண்ணினாள். க்ஷேமதாம ப்ரபத்யே என்று சரணடைந்தாள். அங்குள்ள தாம சப்தத்தை தாம் ப்ரயோகித்தார் ஸ்வாமி. சரணடைந்து அபுநஸ்தன்யபாயியான பேற்றை அடைந்தாள் தேவகி. ஆதலால் தானே தேவகிஸ்தந்யபானம் பண்ணாது போந்தது.

ப்ருந்தாவனசரன் என்ற தொடக்கத்தில் ஒரு ரஸம் உண்டு. கண்ணனைக் கண்டது ப்ருந்தாவனத்தில். கண்ணனைக் கண்ணாக கண்டது அங்கேயே! எங்குத் தான் என்பார்! எவ்வுள் கிடந்தானே என்பர்! எங்கும் உளன் என்றும் மொழிவர். கண்ணன் எனும் கருந்தெய்வம் காட்சிப் பழகிக் கிடந்தாள் ஒருத்தி. இங்கே போதக் கண்டீரே என வினவினள். சரணாதலால் க்வாஸி என்னத்தானே வேண்டும். திவ்யே பதே, ஜலநிதௌ, நிகமோத்தமாங்கே, ஸ்வாந்தே ஸதாம், ஸவித்ருமண்டலமத்யபாகே, ப்ரமஹா- சலே ச, என்றவாறில்லாமல், ப்ருந்தாவனத்தே கண்டோமே ப்ருந்தாவனத்தே கண்டோமே என்று திருவாய் மொழி- கின்றாள் கண்டமை காட்டும் தமிழ்த் தலைவி. கோதை முடிவில் கண்டதை தேசிகன் முதலில் கொள்கிறார். க்ருஷ்ணானுபவம் ஆண்டாளிடம் அந்தமானது தேசிகனிடம் தாயதனமென்னலாம்படி முதலாயிற்று போலும்! கோபால கோளரியை வழிபடுங்கால் துறையாய் விளங்கியவள் கோதையன்றோ! பரவையேறு பரமபுருடன் வினதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின் கீழ் வருவது ப்ருந்தாவ- னத்தில் என்பதையும் நினைக்க. மற்றும் பல ரஸங்கள்.

இந்த விம்சதியில் ப்ருந்தாவனப்ரஸங்கம் இடம் பெற்றது. அங்கு நிகழ்ந்த பரத்வ ஸௌலப்ய ஸௌசீல்ய குணப்ர காசகங்களான

ப்ரஸங்கங்கள். லகுவான ஸ்தோத்ர காவ்யமாயினும் பொருளின் மிகுதியால் இது பெரியதொரு காவ்யம். முதல் சுலோகத்தில் கூறப்படும் சில விஷயங்கள் ஆங்காங்கு காண்பிக்கப்படுகின்றன. ப்ருந்தாவனசரன் திவ்யவேணுரஸிகனுனன். ப்ருந்தாவனத்தில், வல்லவீஜன வல்லபம் என்பதை இறுதியில் வல்லவி வல்லபோ ந: என்று சாதிக்கின்றுர். ஒவ்வொரு சுலோகமும் பாவகர்ப் பாமானது, பல முதல் நூல்களேயும் அதன் கருத்துக்களேயும் மையமாகக் கொண்டு பரிஷ்கரிக்க வந்தது. இங்கு கோடிக் காண்பிக்கின்ற வகையில் ஒவ்வொறு ச்லோக ரஸங்களேக் குறிப்பிட முயற்சி.

वाचं निजाङ्गरसिकां प्रसमीक्षमाणो
वक्त्रारविन्दविनिवेशितपाञ्चजन्यः ।
वर्णत्रि (के) कोणरुचिरे वरपुण्डरीके
बद्धासनो जयति वल्लवचक्रवर्त्ती ॥

வாசம் நிஜாங்கரஸிகாம் ப்ரஸமீக்ஷமாண:
வக்த்ராரவிந்த விநிவேஶித பாஞ்சஜந்ய:
வர்ண த்ரிகோண ருசிரே வரபுண்டரீகே
பத்தாஸநோ ஜயதி வல்லவசக்ரவர்த்தீ (2)

நிஜாங்கரஸிகாம் வாசம் ப்ரஸமீக்ஷமாண: வக்த்ராவிந்த விநிவேஶிதபாஞ்சஜந்ய: வர்ணத்ரிகோணருசிரே வரபுண்டரீகே பத்தாஸந: வல்லவசக்ரவர்த்தீ ஜயதி என்று வரிசைபடுத்திப் பொருள் கொள்ளவேண்டும்.

வாசம் என்ற இரண்டாவது சுலோகத்தின் ஆழ்பொருளே சிறிது கூறுவோம். தனது பெருமைகளேக் குறிக்கும் அடை யாளமுள்ள சொல்லேத் தான் ஆதரத்தோடு பார்த்துக் கொண்டு மூன்று எழுத்துக் கொண்ட தாமரை ஆஸனத்தில் அமர்ந்து வல்லவ சக்ரவர்த்தியாய் விளங்குகின்றுன் என்று கருத்து.

கண்ணனின் தோற்றத்தைக் கூறினுர். இங்க தொட்டி லிட்டு ழந்தைக்கு ரக்ஷை கட்டிப் பாலூட்டியதைப் பேசுகிறுர். வாசம் ன்பது வாயையும் குறிக்கும். அதற்கு ஸ்தானமானதால் அவ்வாறுகலாம். வாய் பேசுமுன் குழந்தை அருகில் வந்து நின்று

பேசுவோரின் முகத்தையும் வாயையும் பார்ப்பது இயற்கை, வாயைப் பார்க்கின்றது என்கிருர். ஏதேதோ வார்த்தையாக இல்லாமல் அது தனது பெருமையையே சொல்லுவதாயும் அமைகிறது. மமாபி தத் பூதிகரம் என்று பெருமையோடு தன் சரிதையைத் தானே கேட்டார்? ஸர்வசக்தனை தான் தன்னை ஒளித்துக் கொண்டாலும் தன்னை சூழ்ந்தவர்கள் எங்ஙனே தனது பெருமையைக் கண்டு விட்டனர் என்றும், இவ்வளவு ரஸிகர்கள் ரஸகனமாகப் பேசுவதுதான் என்ன என்றும், இவ்வளவு ரஸிகர்கள் இங்கு உள்ளனரே என்றும் எம்பெருமான் உகக்கும் போலும்.

நன்ருகக் காண்கிருன் என்றதில் சுவை அதிகம். இவனைக்காண வந்தவர்கள் கண்டனர், இவன் அவர்கள் திவ்விய மாகக் கண்டதைக் காண்கிருன். ஒருவர் கண்டு ஒன்றே சொல்லி செல்லவில்லை. ஊரெல்லாம் அழைத்து உரவெல்லாம் உடன் காண அழைத்ததைப் பெரியாழ்வா- ரன்ருே காண்பர். பாதாதி கேசமதாய்ப் பார்க்க அழைத்தனர். பவள வாயனைக் காண-பவளவாயீர் வந்து காணீரே ! என்று தொடங்கி அழைக்கின்றனர். இந்த அனுபவமன்ருே நிஜாங் கரஸிகமான வாக்கு ! பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள் ஒத்திட்டிருந்தவா காணீரே என்றும், கணைக்கால் இருந்தவா காணீரே என்றும், அச்சுதன் முத்தம் இருந்தவா காணீரே என்றும், திருமார்பு இருந்தவா காணீரே என்றும், தோள்கள் இருந்தவா காணீரே என்றும் கைத்தலங்கள் வந்து காணீரே என்றும், கண்டம் இருந்தவா காணீரே என்றும், செந்தொண்டை வாய் வந்து காணீரே என்றும், வாக்கும் நயனமும் வாயும் முறுவலும் மூக்கும் இருந்தவா காணீரே என்றும், கண்கள் இருந்தவா காணீரே என்றும், புருவம் இருந்தவா காணீரே என்றும், நெற்றி இருந்தவா காணீரே என்றும், குழல்கள் இருந்தனவா காணீரே என்றும் கூறி அசோதை போல்வார் அழைக்கின்றபொழுது அச்சுவை யான பேச்சைக் கேட்பதோடு அவ்வார்த்தையையும் ரஸித்து பார்க்கிருன் என்பதை நினைக்க நமக்குக் கிடைக்கும் இன்பத்துக்குத் தான் எல்லையுண்டோ ! வாக்கை என்பதால் ஸரஸ்வதியை என்று வ்யாக்யானிப்பர் ரஸிகர்.

வாயைப்பார்க்கும் குழந்தைத் தானும் வாயை மெல்லத் திறக்குமே ! அப்போது பால் தேவையோ என்று சங்குப் பாலாடையில் பால் கொடுக்க முயல்வது இயற்கை. சங்கு வாயில் இடம் பெற்றது, அங்கு இடம் பெற்றதும் அதைத் தன் சிறுக்கையால் பிடித்துக் கொண்டது குழந்தை. அச் சங்கம் நழுவாது இடம் பெற்று

பாஞ்சஜன்யமாயிற்று போலும். பாலாடையில் பாலைக் கொடுத்தால் ப்ராக்ருத குழந்தை அதிகமானுல் வாயால் ஊதுவது வழக்கம். அப்ராக்ருத இக்குழந்தையும் அதை ஊதத் தொடங்கியது. அவ்வோசை பாஞ்சஜன்ய ஓசையன்றே ! ப்ரணவ ஒலியன்றே ! தொட்டிலில் ஏற்பட்ட பாஞ்ச ஜன்ய முழக்கம் தேர் தட்டிலும் நிலைத்து வந்தது போலும். கரிய திருமேனி, சிவந்த வாய், வெளுத்த சங்கம், பொருத்தம் தானே ! இது ஒரு வர்ணத்ரிகம். ஐந்து (ஆச்ரித) ஜனங்களைக்காக்க எடுத்து ஏந்திய சங்கம் என்று தேருகிறது. முன் அவதாரத்- தில் காரியம் முடியும்வரை சங்கு இடம் பெறவில்லை, இதிலோ தொட்டில் முதற்கொண்டே. இவனைப் பாடும் நம்மாழ்வாரும் சங்கு சக்கரம் அங்கையில் கொண்டான் என்று சங்கை முதன் மொழிவார். சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன். இவன் ஒருக்கால் சக்கரத்தை எறிந்து கதிரவனையும் மறைப்பான், சங்கு விலகாது. ஆதலாலன்றே ச்ருங்கார ரஸ ஸமாதியில் சங்கோடு வேண்டியது !

மூன்று வர்ணங்கள். நிறமும் எழுத்தும். செந்தாமரை மலரில் மூவர்ணங்களைக் காணலாம். வண்ணம் தீட்டிய பரப்பு. ஸ்வஸ்திகாதி ரேகைகளால் ரக்ஷை கட்டப்பட்ட ஆஸனம். முக்கோண வடிவில் அமைந்தது. பரத்வ- ஸௌலப்ய, ஸௌசீல்யங்கள் முக்கோணம். அதில் கட்டப் பட்ட ஆஸனம். ப்ரணவாகாரமான சங்கை வாயில் வைத்து ஊதுகின்ற பொழுது ப்ரணவ ப்ரதிபாத்யன் என்று தேருமே, அகாரம் அவனைச் சொல்லும், உகார மகாரங்கள் கலந்தும் அவனையே குறிக்கும். மூன்றெழுத்துடைய பேர் அவனதன்றே ! கோபாலன், கோவிந்தன் முதலியவையும் கேசவன் என்பதும் இவ்வவதாரத்தின் திருநாமங்கள். கோபால சப்தம் மந்திரத்தில் சேர்ந்திருப்பதால் தன்னேற்ற முடையது. கோவிந்த சப்தமும் அப்படியே.

வரபுண்டரீகம்

அவன் திருமேனி கமலமயம். ஆஸனமும் அவ்வாறு ஆயிற்று, தங்கத்தாமரை என்று உபநிஷத்து கூறும், எட்டு இதழுடையது என்றும் கொள்ளலாம். மந்த்ர சாஸ்த்ர ஸித்தமான விஷயங்கள் பல. இவன் வெற்றி- யுடையவன், பிறருக்கும் வெற்றியை கூட்டுகிருன். அதற்கு ஏற்ப அவனும் முக்கூறு கொண்ட ஆஸனத்தில் அசையாது அமர்ந்து விளங்குகிருன். இவனைக் கண்டவுடனே வெற்றி என்ன வேண்டுமே. ஆதலால் ஜயதி என்கிருர்.

வல்லவர்களின் நடுவில் இருப்பவன், உபநிஷத்து மண்டலத்துள்ளே விளங்குபவனன்றோ ! ருசாம் மண்டலம், ஸாம் நாம் மண்டலம் என்னுமாப்போலே யாயிற்று வல்லவ மண்டலம் ஸூரிய மண்டலம் வரை செல்ல வேண்டாமே! ஸ்வித்ரு மண்டல மத்ய வர்த்தீ நீயே ! என்றனர். இங்கு அவன் ஸேவ்யன் ஆகிருன். ராஜன்ய சக்ரம் பரிபூய மாதவ: என்ருர் சுகர், அவ்வாறின்றி கோப சக்ரத்தில் அனுபாவ்யனுகிருன். சக்ரவர்த்தித் திருமகன் என்று பேர் பெற்றது போலன்றிக்கே மகனுக இருக்கும்பொழுதே சக்ரவர்த்தியாகவே விளங்குகிருன் என்பது ரஸம், கப்பம் கட்டி வந்த தகப்பனுருக்கு ஏற்ற கப்பத்தைத் தவிர்த்தானுக- லாம். இது ஸ்வாமியின் காவ்யமாதலால் ரஸங்களை அறிய நமக்கேது திறன்! தேவகிக்கு தன்னை மகனுகவும் மஹதோ மஹானுகவும் நினைக்க நியமித்தான். மகனுய் இருக்க ஸ்வாமியும் அவ்வாறே அனுசந்திப்பர். ப்ரம்ஹ- லக்ஷணமான சங்க சக்ரங்களை இங்கு ஸமரித்தது வில- க்ஷணம். பாஞ்ச ஜன்யம் வெளிப்படையானது, குழந்தைப்- பருவமானதால் சக்ரம் மறைந்தது-வல்லவ சக்ரவர்த்தி என்று நடுவில் இணைந்து விட்டது போலும். நிஜாங்க- ரஸிகமான வாக்கு திவ்ய ப்ரபந்தம்.

## आम्नायगन्धि रुदित स्फुरिताधरोष्ठम् -
## आस्राविलेक्षणमनुक्षणमन्दहासम् ।
## गोपालडिंभवपुषं कुहनाजन्याः
## प्राणस्तनन्धयमवैमि परं पुमांसम्

ஆம்நாய கந்தி ருதித ஸப்புரிதாதரோஷ்ட்டம்
ஆஸ்ராவிலேக்ஷண மநுக்ஷண மந்தஹாஸம்
கோபாலடிம்பவபுஷம் குஹநா ஜநந்யா:
ப்ராணஸ்தநந்தய மவைமி பரம் புமாம்ஸம் (3)

ஆம்நாயகந்தி ருதிதஸ்புரிதாதரோஷ்ட்டம் ஆஸ்ராவிலே க்ஷணம் அநுக்ஷண மந்தஹாஸம் கோபால டிம்ப வபுஷம் குஹநாஜநந்யா: ப்ராணஸ்தநந்தயம் பரமம் புமாம்ஸம் அவைமி என்று சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும்.

வேதமணம் கமழும் அழுகையும் துடிப்பும் கொண்ட உதடு உடையவனும், கண்ணீரால் கலங்கிய பார்வை- யுடையவனும் அடிக்கடி மந்தஹாஸம் செய்பவனும், இடையர் குழந்தைவடிவு கொண்டவனும், வஞ்சகப் பேய்ச்சியின் ஆவியோடு பாலையுண்டவனுமானவனை பரமபுருஷனாக அறிகிறேன் என்று கருத்து.

ஆம்நாயகந்தி. சக்ரவர்த்தி என்று முன் சுலோகத்தில் பேசப்பட்டது. சக்ரவர்த்தியின் கார்யம் துஷ்டநிக்ரஹம். அது தொட்டில் முதலே தொடங்குகிறது. சக்ரவர்த்தித் திருமகனாகி முதன்முதலில் தாடகையை வதம் பண்ணினார். ஸ்த்ரீவதம் சர்ச்சைக்கு இடமாகியது. சர்ச்சைக்கே இட மில்லாமல் பூதனையை மாய்த்தார். பூதனை கொடுத்துக் கொல்ல எண்ணினாள். கண்ணன் கொன்று கொடுத்தான். ஆப-ஸத்கதிம் என்றார் சுகர்.

பூதனாஸம்ஹாரப்ரகாரங்கள் இங்கு கூறப்படுகின்றன, அழுதாலும் வேதமணம் மாறாதே ! ஸ்தன்யபான ப்ரவ்ருத்தியை உதடுகளின் ஸ்ப்புரணத்தினாலன்றோ ஊகிக்க- முடியும்! ருதித ஹஸிதங்கள் ஆம்நாயகந்தி. ரோதனம் கர்மக்ருத மன்று. ஸங்கல்பக்ருதம். ஸம்ஹார ப்ரவ்ருத்தி- யாதலால் ரோதனம். அழுவதும் சிரிப்பதும் மாறி மாறி இடம் பெறுகிறது. இது ஒரு வகையான அரி மிரட்டு. அரி குழந்தையை மிரட்டலாம். இந்த அரியை யார் தான் மிரட்டுவார்களோ ! வேஷமோ இடையர்களுடையது. அதிலும் சிறு குழந்தை. திருமேனிதான் அப்படி. தாய் வடிவத்திலே வந்தாள். அவள் தாயன்றே ! தாய்மையும் இல்லாதவள். தாய்மை பெறின் குழந்தைகளை மாய்க்க எண்ணமே தோன்றாதே, தாய் மாதிரி வேஷம். தாயல்லாத- வளுக்குப் பால் சுரப்பது எப்படி ! விஷத்தைச் சுரந்தாள். விஷத்தைக் கண்ணன் பாலை யுண்பது போல் உண்டான். எம்பெருமான் திருமேனி ஸ்பர்சத்தால் பாலும் சுரந்தது. விஷமும் அப்படியே ! ப்ராணைஸ்ஸமம் என்றார் ஸ்வாமியும். பாலை அளிக்க எண்ணினாள். பாலுண்ட வீட்டுக்கு பகை நினைக்கலாகாதே! ஆதலால் ஸத்கதியை அளித்தார் போலும். பூதனையோ குஹனை வஞ்சகப்பேய்ச்சி. பேய்ச்சி பாலையுண்ட மசிமையிலீ என்பர். இவனே தாய். இவன் யாரைத்தான் தாயாக வரிப்பது ! பிதரம் ரோசயாமாஸ என்பது முன் அவதாரத்தில். இங்கு பலரைத் தாயாக வரிக்கின்றான். ஒருவள் பிறப்புக்குத் தாய், மற்றொருத்தி வளர்ப்புக்குத் தாய், மூன்றாமவள் கொல்லவந்த தாய். ஸ்ருஷ்டி ஒன்றில், ஸ்திதி

மற்றென்றில் ஸம்ஹாரம் மூன்றுவதில். முதல்வளின் பாலை அருந்தவில்லை. இரண்டாமவள் பாலை அருந்தினுன். ஆனுல் அவளும் உனக்கஞ்சுவன் அம்மம் தரவே என்பாள். மூன்ருமவள் பாலோடு ப்ராணனையும் அருந்தினுன். தாய்க்கு நற்கதி அளிப்பது பால் குடிக்கும் மகவின் செயலன்றோ! அது பூதனைக்கு பாவனு மாத்திரத்தாலே உடனே கிட்டியது போலும். பரம புருஷன் இவன். இதை நான் அறிய முடிகிறது, அதற்குப் பூதனையை மாய்த்தது ஒன்றே சான்று. குஹனை ப்ரக்ருதி, ப்ரக்ருதி தான் ஜகத்காரணம் என்ருல் ஈக்ஷத்யாதிகள் இன்மையால் அது அவ்வாருகாது என்று தீர்மானிக்கப்பட்டது. ஆதலால் இவனை பரம புருஷன் என்று தீர்மானிக்கப் போதிய சான்றுகள் உள, ஆம்நாயகந்தி சாஸ்த்ர யோநித்வாதிகரணஸித்தம். ஆஸ்ராவிலேக்ஷணம் ஈக்ஷத்யதி கரணஸித்தம். அனு க்ஷணமந்தஹாஸம் ஆனந்த மயாதிகரண ஸித்தம்! அவித்யையை பூதனை என்பர். அது ஜீவனுக்கு ஏற்றது. அந்த அவித்யை பரம்பொருளை நாடியது. பரம்பொருள் அதனுல் கட்டுண்டு உழலாது அதன் ப்ராணனை எடுத்து மாய்த்து விட்டது, அவித்யா பூதநா வியோகம் ஜீவனுக்கும் வேண்டும். அவித்யா விமுக்தன் பரம புருஷன் என்பது நமது ஸித்தாந்தம், வஞ்சனை செய் பூதனையை மாய்த்தார். மாயா யோகம் உடையவன் தான் வஞ்சகர்களை அறிய முடியும். ஆதலால் அவன் கோபால டிம்பனுக இருந்தான் போலும்! ருதிதம் ஆம்நாயகந்தி. பாலரோதனம் பூதனு ப்ராணஹரம். கோபிகாரோதனம் கோபிகா கீதையாயிற்று. ருருது : ஸுஸ்வரம் கோப்ய : என்பார் சுகர், அவஜானந்தி என்னுமாப் போலே ப்ரௌடகோபாலரோதனம் துர்யோதனுதி ப்ராணுபஹாரி என்பதையும் நினைக்க.

அர்ஜுனன் அழுதான். கீதாம்ருதபானம் பண்ணினுன். கண்ணன் அழுதான் பூதனுப்ராணபானம் பண்ணினுன் போலும். குத்ஸிதமான புத்தியோடு ஹனனம் செய்து வந்தாளாதலின் புதனை-குஹனை, பூமியில் உள்ளவர்களைத் துன்புறுத்தியவளாதலின் அவ்வாருகலாம். எங்குதான் இழுத்துச் செல்லுமோ என்று தோன்றுமாதலின் ப்ரக்ருதியும் குஹனை. பூதனையும் தாய்!

आविर्भवत्वनिभृताभरणं पुरस्तात्
आकुञ्चितैकचरणं निभृतान्यपादम् ।

दध्ना निमन्थमुखरेण निबद्धतालं
नाथस्य नन्दभवने नवनीतनाट्यम्

ஆவிர்ப்பவத்வநிப்ருதாபரணம் புரஸ்தாத்
ஆகுஞ்சிதைக சரணம் நிப்ருதாந்யபாதம்
தத்நா நிமந்த்தமுகரேண நிபத்ததாளம்
நாதஸ்ய நந்தபவநே நவநீதநாட்யம் (4)

ஆகுஞ்சிதைகசரணம் நிப்ருதாந்யபாதம் அநிப்ருதா பரணம் நிமந்தமுகரேண தத்நா நிபத்த தாளம் நந்தபவநே நாதஸ்ய நவநீத நாட்யம் ஆவிர்ப்பவது என்று வரிசைப் படுத்துப் பொருள் கொள்ள வேண்டும்.

ஒரு கால் மடக்கியதும், அசையாமல் இருக்கும் மற்றொரு காலின் நிலையையுடையதும் அசைகின்ற ஆபரணங்களையுடையதும் கடைவதால் ஒலிக்கின்ற ஓசையால் தாளம் அமைக்கப்பட்டதும் நந்தபவனத்தில் நாதன் செய்யும் நவநீத நாட்யம் என் முன்னே தோன்றட்டும் என்று கருத்து.

ஆவிர்ப்பவது. ஆவிராஸீத் என்பது அவதார ஸமயச்லோக வார்த்தை. கோபிகாகீதை தோன்றியதும், தாஸாம் ஆவிரபூத் என்பது ப்ருந்தாவனத்தில் அவதார வார்த்தை. ஸ்வாமியும் ஆவிர்ப்பவது என்பதையே திருவுள்ளம் பற்றுகிறார் போலும். இருப்பவன் தோன்றுவதுதான் ஆவிர்ப் பாவம். என்றும் இறவாத எந்தையாதலால் கண்ணன் எங்கும் என்றும் உளன். அவனது நாட்யம் நம் முன்னே தோன்றட்டும்.

ஒரு காலில் நின்று ஒரு காலை மடக்கி நிற்கும் நிலை. இது மாறி மாறி நிகழக்கூடியது. தக்ஷிணம் குஞ்சயித்வா என்றபடி நிலையான நிலையன்று. தொடர் சங்கிலிகை சலார்பிலா ரென்னலாம். ஒரு திருவடி நிலைத்திருக்கிறது. மற்றொன்று தாரகையின் உலகும் தடவி அதன் புறமும் விம்ம வளர்ந்த வாறின்றி குஞ்சிதமாக மடக்கப்பட்டுள்ளது. ஸங்கோச மில்லை. காலை மடக்கி நிற்பதை ஸேவித்தாலே எதையும் கொடுத்துவிடலாம் என்று தோன்றுமே. முத்தும் மணியும் வயிரமும் நன் பொன்னும் தத்திப்பதித்துத் தலைப்பெய்தாற் போல் எங்கும் பத்துவிரலும் மணி வண்ணன்

பாதங்கள் ஒத்திட்டுருந்தவா காணீரே என்றனர். இங்கு அவன் சாத்திய ஆபரணங்களைக் கூறியதாகும். யாசகம் செய்ய வருபவன் நிலைத்து நின்று கேட்டால்தானே அதைப் பெற முடியும்! முதலில் மறுத்தாலும் நிற்கின்ற நிலையைப் பார்த்து மனம் இறங்குமே !

இங்கு அதிசயமான நிலையில் ஸ்வாமி அனுபவிக்கிறார். யசோதை தயிர் கடைகின்றாள். வெண்ணெய் திரண்டு வருகிறது. அதை அமுது செய்ய ஆசை க்ஷீராப்தி நாதனுக்கு. தயிரோசை, ஜாகரூகனுக்கன்றோ செவியில் படும். மத்தினால் ஓசைபடுத்த தயிரரவம் கேட்டிலையோ என்றல்லவோ ரஸிகர்களின் அனுபவம். மலைதேய்க்கும் ஒலியினும் இங்கு தயிர் அரவம் விஞ்சியிருக்குமே: தேவா- ஸுரஸம் பந்தமில்லாமல் சுத்தயாஜிகளின் க்ருத்யமாகுமே: அங்கு விஷாதிகள் இங்கு வெண்ணெய் மட்டும், அங்கு பச்சைப்பாலைக் கடைந்தனர். இங்கு பரிஷ்க்ருதமான தயிரைக் கடைகின்ற நிலை. இது சிஷ்டாசாரம்.

கடைகின்றபொழுது எழும் ஓசை திவ்யமானது, ஒரே சீரானது. கடைகின்ற யசோதையும் பூரிப்போடு கடை- கிறாள். காலத்திலே நடக்குமாதலால் அவஸரக்கோலம் இல்லை. அலங்கோலமுமில்லை. ஸ்திமிதமானநிலை, ரஜ்வா கர்ஷ ச்ரமம் உண்டு. கைவளைகளும் அசைந்து இசைக்- கின்றன, ஸாமத்வனி போன்ற ஆந்தரகீதம். ப்ரம்ஹா னுபவமும் இதற்கிணையோ ! ஸ்வாமி தேசிகன் அங்கு எம்பெருமான் எழுத்தருளியதையும் தேஹி என்று கேட்காமல் அபி நயத்தாலேயே தன் ஆசையை வெளிப்- படுத்துவதையும் இதில் சித்திரிக்கிறார்.

வெண்ணெய் தாழியில் மேலும் கீழுமாகத் திரண்டு வருகிறது. ஸாரக்ராஹியாதலால் அதில் நோக்கு. அதை வேண்டுகிறார். வைகலும் வெண்ணெய் கைகலந்துண்- டான் எங்கும் தானாய நாங்கள் நாதனே என்னுமாப்போலே விடியிற் காலையில் வெண்ணெய் அமுது செய்தால் என்ன தீங்கு வருமோ என்ற சிந்தை யசோதைக்கு . அபிகமனத்தின் நிலை மாறிவிட்டது. நாமவனை நாடவேண்டியிருக்க அவன் தானே நாடிவருகிறான். கொஞ்சுகிறான், கெஞ்சுகிறான், மறுக்கிறாள் மன்றாடுகிறான். பிறர் கண்களில் பட்டதை அவன் உகப்ப தில்லை. அதற்கு முன்னமே அமுது செய்யத் திருவுள்ளமாகலாம். நவமாக நீதமானால் தான் அவன் உகப்பது ! இது ஒரு நவநீத நாட்டியம் என்கிறார். இந்த சுலோகத்தின் சுவையை எங்ஙனம் எழுத்தில் வடிப்பது ! தாழியில் வெண்ணெய் குதிக்கிறது.

அது ஒரு நாட்டியம், நாட்டியத்துக்குத்தேவை தாளம், வெண்ணெய் கூத்தாடி- ஞல் தயிரன்ரோ தாளம் போடுகிறது ! இதுவரை கண்டிராத நாட்டியமிது, இது முதல் நிலே. தாழியில் எழும் வெண்- ணெய் விழுங்க கண்ணன் துடிக்கிருன், அதற்குக் கூத்தாடு கிருன். இதுவும் இதுவரை கண்டிராத நவநீத நாட்டியம், க்ஷீராப்தி நாதன் ஆடிஞல் தயிர் தாளம் போடுவது ஸ்வரூப லாபத்துக்காகவுமாம். இவன் கோவிந்தராஜன், இவனே மகிழ்விக்க இவனுடைய திருவோலக்கத்தில் ஆடியவனும் உண்டு. ராஜ ஸந்நிதியில் ஆடியவன் நடராஜன், அவனுடு வதைக் கண்டு ரஸிக்கும் ஸம்ஸார நாட்யரஸிகன். ஸபையிலும் அரங்கத்திலுமே ரஸிப்பவன் தானே ஆட ஆரம்பித்துவிட்டான். இதுவரை கண்டிராத நவநீத நாட்யமன்ரோ இது! புதிய வெளியீடு என்ருலே ரஸிகர்களுக்கு ஆர்வம் அதிகம், இதில் ரஸிக ஸார்வ பௌமன் ஸ்வாமி தேசிகன், இது நடக்கும் கொட்டகை மாயாபவனமாக இல்லாமல் நந்தபவன மாயிற்று என்கிருர். இடம் தெரியாது போஞல் எங்கு செல்வது ? நாதனே நடிக்கிருன் என்ருல் துடிப்பு ரசிகர்களுக்கு ஏற்படுவது இயற்கை, நந்தபவனம் ஆனந்த நிலேய விமானம், அங்கே இருப்பவன் நாதன், நாதன் அமுதம் பங்கிட நடித்தான். அப்பொழுது அவன் மோகினியாக மாறிஞன், கொடுப்- பதற்கு அப்பொழுது ஆடியது, இருவரைக் கெடுப்பதற்- காகவும் இருக்கலாம், காளியன் உச்சியில் தூயநடம் பயின்றது அவன் கொழுப்பை அடக்கி ஆயர்களேயும் ஆனவர்களேயும் காக்கவாம் ! அவ்வாறின்றிக்கே இங்கு ஆடுவது நவநீத நாட்டியம்.

ஸ்வாமியின் வார்த்தையில் அடங்கியிருக்கும் ரஸ பாவங்களே தீக்ஷிதாதிகள் வியந்துப் போந்தனர். இங்கு ஸ்வாமி ஶ்ரீ ஸூக்தியானதால் ஸரஸ்வதி எப்படி நர்த்தன மாடுகிருள் என்பதை சுருக்கமாக விண்ணப்பம் செய்கிறேன். உத்தரார்த்தம் ஸர்வோத்தரம், தயிர் தாளம் போடுவது என்ருல் என்ன! தேசிகனேயன்ரோ விடை கேட்க வேண்டும்! அவர் கூறுவதுதான் என்ன ? தயிர் என்பது ஸத் ஸம்ப்ரதாயம் என்கிருர். இதைச் சிறிது விவரிப்போம். உபநிஷத்துக்கள் பசுக்கள், கரப்பவன் கண்ணன், கீதை என்பது கரந்தபால், அர்ஜுனன் கன்று, அறிவாளி அந்தப்பாலேப் பருகுபவன் எனப்பட்டது. கீதாமுதத்தோடு திவ்யப்ரபந்த ரஸம் சேர்ந்தது, பாலும்-ரஸமும் கலந்தது, நாதமுனிகளால் இணேக்கப்பட்டு தயிராயிற்று. ஆள வந்தாரும் ராமானுசனும் கடைந்தனர். திரண்டது வெண்ணெய். இதோ அதை எடுத்து தருகிறேன், இதுதான்

தத்வநவநீதம், இம்மாதிரியே ரஹஸ்ய நவநீதம் என்பதையும் ஸ்வாமி காண்பிக்கிருர். ஆதலால் இங்கு அமைந்திருக்கும் சொற்களின் பொருளை இவ்வாறு அனுபவிக்கலாம். நாதஸ்ய--என்பது நாதமுனியைக் குறிக்கும், நிபத்த தாளம் என்பது திவ்யப்ரபந்தத்திற்கு ஸ்வாமி தாளம் வழங்கியதை உணர்த்தியபடியாம், நந்தபவனம்-ஸம்பிரதாயம்.

நாட்டியத்துக்கு விளம்பரம் செய்யும் பாங்கில் அமைந்த இந்த சுலோகத்தின் சுவைதான் என்னே!

**हर्तुं कुम्भे विनिहितकरः स्वदु हैयङ्गवीनं**
**दृष्ट्वा दामग्रहणचटुलां मातरं जातरोषाम् ।**
**पायादीषत् प्रचलितपदो नापगच्छन् न तिष्ठन्**
**मिथ्यागोपः सपदि नयने मीलयन् विश्वगोप्ता**

ஹர்த்தும் கும்பே விநிஹிதகர: ஸ்வாது ஹயங்கவீநம்
த்ருஷ்ட்வா தாமக்ரஹண சடுலாம் மாதரம்
ஜாதரோஷாம்
பாயாதீஷத் ப்ரசலிதபதோ நாபகச்சந் ந திஷ்டந்
மித்யாகோப : ஸபதி நயநே மீலயந் விச்வகோப்தா (5)

ஸ்வாது ஹையங்கவீநம் ஹர்தும் கும்பே விநிஹிதகர: ஜாதரோஷாம் தாமக்ரஹணசடுலாம் மாதரம் த்ருஷ்ட்வா நாபகச்சந், நதிஷ்ட்டந், ஸபதி நயநே மீளயந் விச்வ கோப்தா மித்யாகோப: பாயாத் என்று வரிசைப்படுத்திப் பொருள் கொள்க.

மதுரமான வெண்ணெயை அபஹரிக்க தாழியில் ஆழம் வரை கையை செலுத்தியவனுய், ரோஷம் கொண்டு கயிறு எடுக்க அலேகின்ற தாயைக்கண்டு சிறிது நகர்ந்த- வனுய் செல்லாமலும், நிற்காமலும் பொய்யான இடையன் உலகத்தைக் காப்பவனுய் உடனே கண்களை மூடிக் கொண்டவன் காப்பாற்ற வேண்டும் என்று கருத்து.

ஹார்த்தும். அத்புதமான சித்திரம் தொடங்குகிறது. வெண்ணெயை யாசித்தது முன் சுலோகத்தில். கிடைக்கப் பெருமையால் தொடங்கின தொழில் முதல் சொல்லால் கூறப்படுகிறது. ஏன் இத்தகைய ப்ரவ்ருத்தி ! ஸ்வாது ருசி யான வஸ்து. ஸ்ரீவைகுண்டத்திலோ, திருப்பாற்கடலிலோ இத்தகையது கிடையாது. அதனால் பகவத்புத்தியினாலும் ஸ்வாதுவானது இவ்வெண்ணெய், ஹரணம் செய்ய முயற்சி, அவன் ஹரி. அவன் தொழிலும் அதுவே. ஸ்வதர்ம நிஷ்ட்டனாகவும் ஆகலாம். ஹரி: ஹரதி பாபாநி என்பர். இங்கு பரம போக்யமான வஸ்துவை ஹரணம் செய்கிறான். முன்பு அபஹரித்தான் பலி, அதை மறுபடியும் ஸ்வாதீனமாக்க அவனிடமிருந்து ஹரணம் செய்தான். அப்பொழுது திருவடிகள் தொழில் செய்தன. இங்கு திருக்கரம் நீண்டது. திருக்கரத்தின் விக்ரமத்தை இங்கு காணலாம், தடங்கையாற விழுங்கின. ஆழ்ந்த தாழியில் தோய்ந்த கை, களவு கண்டுபிடிக்க அவன் கையே நமக்கு உதவும். இப்படியும் ஒரு அபிநவமான அபிநயம். திருடப்போனவன் வஸ்து ஸ்பர்சம் ஏற்படும் பொழுது பின்புறமே பார்ப்பது வழக்கமாகலாம், அவன் கண்டது வெண்ணெய் அல்ல, களவு கண்டு பிடிப்பாரை யன்றோ கண்டுவிட்டது ! அதை எடுத்த எடுப்பிலேயே த்ருஷ்ட்வா என்கிறார். திருடனைப் பிடிக்க வேண்டும். பிடித்தால் நழுவி ஓடிவிடலாம், தாம்புகொண்டு கட்டிப் போடவேண்டும், எதிர்பாராத விதமாக நடந்த இத்திருட்டில் தாம்பு தயாராக இல்லை. தயிர் கடையும் மரத்திலேயே தாம்பு கட்டப்-பட்டிருக்கும். அதை எடுக்கத் தாய் முயற்சிக்கிறாள். எடுக்காவிட்டாலும் செய்யும் ஆடம்பரம் அதிக பயங்கர மாயிருக்கும். வேறு யாருமில்லை, தாய் தானே ! ஆனால் அவளுக்கு ரோஷம் தலைக்குமேல் போய் இருக்கிறது. ஏன் இப்படி ஒரு குழந்தை திருட்டுத் தொழிலை மேற் கொண்டு- விட்டதே அல்லது வைத்திருந்த வெண்ணெய் வீணாகப்- போய்விட்டதே அல்லது குழந்தைக்கு உடம்புக்கு என்ன ஆவது, எந்த எண்ணமானாலும் ரோஷம். இங்கு ஒரு ரஸம். ப்ரமேயமான கண்ணனை ப்ரமாணமாகிற கயிற்றினால் ப்ரமாதாவான மாதா கட்ட விழைகின்றாள், அத்புதரஸம் இங்கு உள்ளது, ரோஷ முடைய தாயைக் கண்டு வெண்ணெய்த் தாழியில் கையை வைத்திருக்கும் கண்ணன்: நிற்பனோ, ஓடுவனோ! நிற்கவு மில்லை, ஓடவும் இல்லை.

ஆவாரார்துணை என்றிருப்பவன் கண்ணன். அவனை யாரும் காப்பாற்ற வரலாம், ஆனால் ஸ்வாமி அந்த நிலையில் அவன் நம்மைக்

காப்பாற்றட்டும் என்கிருர். அவன் செய்த அதிமானுஷ சேஷ்டிதங்கள் நம்மைக் கவர்கின்றன. இவன் செய்த பால பாவத்துக்குச் சேர்ந்த அதிமானுஷ சேஷ்டை தான் அவன் கண்களை மூடிக்கொண்டது. என்ன வேஷம்! வேஷத்துக்கேற்ற நடிப்பு தான் எத்தகையது ! கடன்பட்டு நெய்யைக் குடிக்கச்சொன்ஞர்கள். இவன் அதற்கு மேற்படியை அடைந்துவிட்டான் போலும். இவன் இடைப் பிள்ளை, இதுவும் உண்மையன்றே ! மித்யா கோபன் என்கிருர். இவன் ரக்ஷகன், இவன் ரக்ஷிப்பது விச்வத்தை. விச்வகோப்தா கண்களை மூடிக்கொள்கிருன். பால சேஷ்டிதம். தன் கண்களை மூடிக்கொண்டால் தாயின் கண்களும் தன்னைக் காண முடியாமல் போகும் என்ற எண்ணம். பிறந்ததே மாயம், உன் மாயம் முற்றும் மாயமே என்றனர். திருடுகின்றவன் பேரை சரியாக கொடுக்க மாட்டான் போலும், வைகலும் வெண்ணெய் கை கலந்துண்டான், பொய்கலவாது என் மெய் கலந்தானே என்பதையும் நினைக்க.

व्रजयोषिदपाङ्गवेदनीयं
मधुराभाग्यमनन्यभोग्यमीडे ।
वसुदेववधूस्तनन्धयं तत्
किमपि ब्रह्म किशोरभावदृश्यम्

வ்ரஜ யோஷிதபாங்கவேதநீயம்
மதுராபாக்ய மநந்ய போக்ய மீடே
வஸுதேவவதூஸ்தநந்தயம் தத்
கிமபி ப்ரஹ்ம கிசோரபாவத்ருச்யம் (6)

மதுராபாக்யம் கிஶோர பாவத்ருஶ்யம் வஸுதேவ வதூ ஸ்தநந்தயம் வ்ரஜயோஷிதபாங்கவேதநீயம் அநந்ய போக்யம் கிமபி ப்ரம்ஹ ஈடே என்று வரிசை படுத்திப் பொருள் கொள்ள வேணும். மதுரைப்பதியின் பாக்யமாகத் தோன்றினதும், குழந்தை பருவத்தில் காணப்படுவதும், வஸுதேவரின் தேவியார் பெற்றெடுத்ததும், வ்ரஜபூமியில் உள்ள பெண்டிரின் பார்வை கொண்டு காணத்தக்கதும் அவனையன்றி வேறெவரையும் நாடாதவர்களுக்கு பரம போக்யமாயிருப்- பதும் அதிவிலக்ஷணமுமான அந்த பரம் பொருளை துதிக்கின்றேன் என்று கருத்து.

முத்திதரும் நகரேழில் இரண்டாவது இடத்தைப் பெற்றது ஸ்ரீமதுரை. ப்ரதானமான இரண்டு அவதாரங்- களில் க்ருஷ்ணாவதாரத்தைப் பெற்றபடியால் மதுரைக்குத் தன்னேற்றம். பகவான் நித்யஸாந்நித்யம் பண்ணும் ஸ்தல மாயிற்றே ! நாகபர்யங்கத்தை விட்டுவிட்டு மதுரைக்- கன்றோ வந்து விட்டான் என்பதால் மதுரையின் பாக்யமே பாக்யம்.

வ்ரஜத்தில் உள்ள பெண்களின் ஸௌபாக்யம் சொல்லுக்கு அப்பாற்பட்டது. அவர்களுடைய கடைக்கண் பார்வைகளால் தாக்கப்பட்டவனாகி விட்டான். ப்ரம்- ஹத்தைக் கண்களால் காண இயலாதே. ஆனால் அது குழந்தைப் பருவத்தில் காணப்படுகிறது. பூதனையை மாய்த்த சிறு குழந்தையை பரமபுருஷனாக அறிந்து கொண்டு விட்டேன் என்றார். முதலில் சாஸ்திரத்- தினாலேயே அறியப்பட வேண்டிய பரம் பொருள் த்ருச்யமாக இருக்கின்றதே என்று ஆச்சர்யப்படுகிறார். பாக்யமாயிருப்பது தான் போக்ய மாகின்றது என்பதும் ரஸம்.

ஸ்தநந்தயம் என்கிறார். தேவகியின் குமாரன் என்று சொல்லாமல் இவ்வாறு கூறியதையும் கவனிக்க வேண்டும். யசோதைப் பிராட்டி உனக்கஞ்சுவன் அம்மம் தரவே என்பாள். பால் ஊட்டி வளர்க்க வில்லையே என்று தேவகி ஏங்குவாள். யசோதை பால் அருந்தினாலும், அதை தேவகி பாலை அருந்தினதாகவே கொள்ள வேணும் என்கிறார். ஜன்மமே இல்லாதவனை ஸ்தநந்தயனாக ஆக்கி விட்டவள் தேவகி தானே ! லீலாவிபூதியில் பரப்ரம்ஹத்- தின் லீலைகளை அறியத்தான் ஆமோ ! தத் என்பதற்கு அது என்று பொருள் அது என்பது எதிரில் இல்லாததைத்தான் சொல்ல முடியும். ததிதி பரோக்ஷே என்பர். கிமபி ப்ரம்ஹ என்கிறார். வரையறுத்துச் சொல்ல இயலாததான நிலை க்ருஷ்ணப்ரம்ஹஸாக்ஷாத்காரமும், பரிபூர்ண ப்ரம்ஹானு பவமும் வ்ரஜத்தில் பிறந்த பெண்டிருக்குத்தானே கிடைத்தது.

ந கலு கோபிகா நந்தநோ ! பவாந் என்று பெண்கள் தானே கண்டு கொண்டனர் ! ஈடே என்கிறார். துதிக்கிறேன் என்று பொருள். அக்நிம் ஈடே புரோஹிதம் என்று தொடக்கம். ஈட்யவபுஷே என்றார் ஸ்ரீசுகரும்.

வ்ரஜயோஷித்; பெருமையும் சிறுமையும் கலந்து கலந்து காண்கின்றோம். இவன் விச்வகோப்தா. இவனை எங்கே காண்பது? பிராட்டியின் கடாக்ஷம் செல்லுமிட மெல்லாம் செல்வக்குவியல்கள் போட்டியிட்டுச் சென்று சேரும். எம்பெருமான் கடாக்ஷத்துக்கு

இலக்கானவர்கள் நற்பத மேறுவர். அந்த விஷ்ணு எங்குதான் உளனே! அவனை எங்கு காணலாம்? வைகுந்த விண்ணகரில் என்பர், நாஹம் வஸாமி வைகுண்டே என்றான். திருப்பாற்கடல் என்றால் உள்ளே செல்ல அனுமதியில்லையே! மதுரையிலா, கோகுலத்திலா, சுலபமானவழியை ஸ்வாமி காண்கின்றார், நமக்கும் காண்பிக்கின்றார். ப்ருந்தாவனத்தில் காணலாம் என்றாள் கோதை. கோபியர் கூட்டத்தில் என்பர். கோபியர்களின் கண்பார்வை எங்கு விழுகிறதோ அந்த இடத்தில் க்ருஷ்ணன் இருப்பது உறுதி என்பர் ஸ்வாமி தேசிகன், வேதவேத்யன் தான் என்பார் கீதையில் அவன் வ்ரஜயோஷிதபாங்க வேதநீயன் என்கிறார் ஸ்வாமி.

மதுரை பாக்யமுடையது, அங்கு அவன் எப்பொழுதுமே ஸந்நிதானம் பண்ணுகிறான், காஞ்சீ பாக்யம் என்றார் சொன்ன வண்ணம் செய்த பெருமாளை. அவ்வாறே கண்ணன் மதுரையின் பாக்யமாகத் தோன்றினான். விபவத்துக்கு ஏற்ற இடம். விச்வகோப்தா என்று முன்பு பேசப்பட்டது, இதெல்லாம் எப்படித்தான் விளங்குமோ! அவன் அனன்யபோக்யன், கண்ணனல்லால் தெய்வ- மில்லை என்றிருப்பவர்கள் அனன்யர்கள். அவர்களுக்குத் தான் அவன் தேனும், கன்னலாயும், அமுதாயும் பரம போக்யமாகிறான். அனன்யர்களுடைய யோகக்ஷேமங்களைத் தான் வகிப்பதாகச் சொன்னான். வாயவனை யல்லது வாழ்த்தாது, போக்தாவும் ப்ரேரிதாவும் போக்யமுமாகிறான், துதிக்கத்தானே வேண்டும். இவன் யார்? குழந்தைப் பருவம் தான், வஸுதேவர் தகப்பனார் திருநாமம் இடம் பெற்றது. தேவகியின் திருநாமத்தை மறைத்ததும் மங்களா சாஸனச் சுவடு. குமாரன் முதலான சொல் இருக்க, ஸ்தனந்தயம் என்கிறார். ப்ராக்ருத சக்தியுடைய குழந்தை- யானால் யசோதை மடியில் இருக்க அவளது ஸ்தன்ய பானமே செய்திருக்கும். இது இவ்வாறில்லை. அவள் மடியில் இருப்பினும் யோக மஹிமையால் தேவகி ஸ்தன்ய பானமும் ப்ராப்தமாகலாம். குலசேகரப்படியிலும் ஒரு படி உயர்ந்தது தேசிகர்படி. இப்பரம் பொருளை யாரே அறிய வல்லார்! இது ப்ரம்ஹம், விலக்ஷணமான ப்ரம்ஹம். தன்னைத் தாய் வேண்டுகின்றபொழுது, யுவாம் மாம் என்று தொடங்கி, மகனாகவும் நினையுங்கள், பரம் பொருளாகவும் நினையுங்கள் என்று சொன்ன பரம் பொருள் இதுவே. இத்தனை சொல்லியும் தேவியின் சொற்படி பூர்வ ப்ராக்ருத சிசு: என்று கிசோரபாவத்தை அடைந்ததே. அதனாலன்றோ அத்ருச்யமான ப்ரம்ஹம் நமக்கெல்லாம் புலனாயிற்று.

परिवर्तितकन्धरं भयेन
स्मितफुल्लाधरपल्लवं स्मरामि ।
विटपित्वनिरासकं कयोश्चित्
विपुलोलूखलकर्षकं कुमारम्

பரிவர்த்திதகந்தரம் பயேந
ஸ்மித-புல்லாதர பல்லவம் ஸ்மராமி
விடபித்வநிராஸகம் கயோஸ்சித்
விபுலோலூகலகர்ஷகம் குமாரம் (7)

கயோஸ்சித் விடபித்வநிராஸகம் விபுலோலூகல கர்ஷகம் பயேந பரிவர்த்திதகந்தரம் ஸ்மிதபுல்லாதர பல்லவம் குமாரம் ஸ்மராமி என்று வரிசை படுத்திப் பொருள் கொள்ள வேணும்.

ஏதோ இருவரின் மரமாயிருத்- தலை மாற்றினவனும், (அதற்காக) பெரிய உரலை இழுத்துச் செல்பவனும், (அதனால்) பயத்தினால் கழுத்தைத் திருப்பியவனும், (அப்பொழுது) சிரிப்பினால் அலர்ந்த அடி உதடுகளை யுடையவனுமான குமாரனை நினைக்கிறேன் என்று கருத்து.

இதற்கு முந்திய ச்லோகத்தில் கிஶோராவஸ்தையில் ப்ரம்ஹத்தைக் கண்டார். உடனே கௌமாராவஸ்தை, அடுத்த ஶ்லோகத்தில் யௌவநாவஸ்தை, பயத்திற்கு காரணமும். ஸ்மிதத்திற்கு காரணமும் விலக்ஷணம். பயக்ருத் பயநாசன: எனப்பட்டவனுக்கு பயம். மேலே செல்ல வேண்டிய வழியை நோக்காமல் பின் திரும்பிப் பார்ப்பது பயத்தின் கூறே. பயத்தை கொண்டிருப்பவர் செய்யும் இவன் கழுத்தை மட்டும் திருப்பினான். சென்று கொண்டிருப்பவர் பின்புறம் திரும்பி திரும்பிப் பார்த்தால் அங்கு பயம் என்று தான் சொல்ல வேண்டும். ஒரு சிக்ஷை அனுபவிப்பவன் மற்றொரு சிக்ஷையனுபவிப்பவனிடம் செல்ல இருக்கிறான். அதனால் பயம், பயாபிநயம். உரலை இழுத்துப் போவது மற்றொரு குற்றம், தண்டனை பயாபி- நயம், உரலை இழுத்துப்போவது மற்றொரு குற்றம், தண்டனை பெருகுமோ என்ற பயம்!

இதில் என்ன சிரிப்பு ! தன் செயலிலேயே தனக்கு சிரிப்பு. இந்த உரலை இழுக்க முடியாது என்று அம்மா நினைத்தாளே என்று அதையும் நினைத்து சிரிப்பு. உரலிலே கட்டுண்டு கிடக்கும் பொழுது அழத்தானே வேண்டும். சிரிப்பு எப்படி! அலர்ந்த கீழ் உதடுகள். சாபவிமோசனம் செய்யப்போவதை இவள் எப்படி அறிவாள் என்று நினைத்து சிரிப்பு. இந்த சிரிப்பில் தான் தத்வம் அடங்கியிருக்கிறது. இரண்டு பேர் இரண்டு மரங்களாக நிற்கின்றனர். இரு மரங்களையும் பக்ஷபாதமில்லாமல் ஒரே சமயத்தில் சாய்க்க வேண்டு மானால் உரல் இடையே செல்ல வேண்டும். இடையில் கட்டின உரல் மரங்களின் இடையே சென்றதால் உரல் மோதி மரங்கள் விழுந்தன என்று நம்ப வைப்பதில் நம்பிக்கை போலும். மரத்தில் யக்ஷர்கள் என்னாமல் மரமே யக்ஷர்கள். அவர்கள் மறைந்து விட்டால் மரங்களே மறைந்-திருக்கிவேண்டுமே என்று எண்ண இடமுண்டு. அவர்களுக்கு மரமாக இருக்கும் தன்மையை மாற்றினார். இவர்கள் அறியும் வண்ணம் மரங்களும் வீழ்ந்தன என்று காண்பிக்கிறார். ஆதலால் ஸ்மிதம் சிரிப்பு. உரலை இழுத்துச் சென்றான். பழைய மரங்கள் விழுந்துவிட்டன என்று மட்டும் அறியச் செய்தான்.

பரிவர்த்தித : கிசோராவஸ்த்தையில் சரண்யனுடைய லீலை பேசப்பட்டது. கௌமாராவஸ்தை. அங்கு நடந்த அற்புதமான சேஷ்டிதம். வேண்டினான் கிடைக்க வில்லை. அபஹரிக்கத் தொடங்கினான், பரம் பொருளானாலும் ஒரு நாள் அகப்படுவது திண்ணம். அவச்யம் அனுபோக் தவ்யம். கயிறு எடுக்க விரைந்தபொழுது கொஞ்சம் விளம்பம் ஏற்பட்டது போலும். அந்த நிலையில் ஒரு ஸ்தோத்திரம். அது ஈடே என்பதால் ஏற்பட்டது. கயிறு கிடைத்ததும் கட்டியதும் நடந்துவிட்டது. மலையைத் தூக்கப் போகின்றவனை உரலில் கட்டுகிறாள். எம்பெரு- மானை சிலையில் கட்டுப் படுத்தவேண்டும் என்பதொரு வழக்கை ஏற்படுத்தினாள் போலும், கோலம் செய்து இங்கே இரு என்பர். இந்த்ர இவேஹ என்பர். ஸத்தாவரத்- தையும் நடத்திச் செல்பவ னாயிற்றே ! இடத்துக்கும், காலத்துக்கும், அதிகாரிக்கும் ஏற்ற சிக்ஷை. சிக்ஷை அனுபவிப்பவனுக்கு அந்த இடத்தைவிட்டு ஓட வேண்டும் என்ற எண்ணம் ஸ்வாபாவிகமாக ஏற்படும். எத்திறம் ! உரலோடு நகர்ந்தான். திடீரென்று ஒரு எண்ணம், உரலும் வருகிறதே, இதைக்கண்டால் தாய் மேலும் சிக்ஷிப்பளோ ! பயம் உண்டாகிறது, அபயம் அளிப்பவன் பயப்படுகிறான். பீஷாஸ்மாத் வாத ! பவதே

எனப்படுபவன் பயப்படுகிருன். திரும்பிப் பார்க்கிருன், என்ன பார்வை, யசோதை வரவில்லை, வந்து விடுவாளோ என்ற பயம் தொடர்கிறது. உரலும் பின் தொடருகிறது.

ப்ராயேண தேவி வதனம் பரிவர்த்திதம் ஸ்யாத் என்பர். அங்கு முகத்தைத் திருப்பியது பாபிகளான நம்மீது முழிக்க இஷ்டமில்லாமல் என்பதாம். இங்கோ கௌமார சேஷ்டை. பயந்தான் காரணம் என்கிருர். ஸிம்ஹகுஹாவலோகனம் போலன்றிக்கே, இவ்விளஞ்சிங்கம் பயந்து திரும்பிப் பார்க்கிறது. தாம் செய்யப்போகும் அனுக்ரஹப்ரகாரத்தை யாராவது கண்டுவிடுவரோ என்ற பயமும் இருக்கலாம். வெண்ணெய் உண்டதற்கே இத்தண்டனை, மரங்களைச் சாய்த்தால் என்ன தான் செய்வாளோ என்றும் பயம் இருக்கலாம். அனுக்ரஹ கார்யமும் விலம்பிக்கலாகாதே என்றும் பயம். இங்ஙனமே பல காரணங்கள். ருதிதமும் ஹஸிதமும் முன்பு பூதனுஸம்ஹார ஸமயத்தில், இங்கு பயமும் ஸ்மிதமும், அங்கு கீழ் உதடுகளின் துடிப்பு, இங்கு அது இல்லை, தளிர் போன்ற நிலை, ஸ்தாவரத்தில் கட்டினுள், ஸ்தாவரங்களுக்கு விமோசனம். விடர்களாயிருந்தவர்கள். விடபிகளாக மாறினர். அது நாரத சாபம், இருவருக்கும் இரண்டு நிலைகளையும் போக்கியனுக்ரஹம். அஹல்யை- யின் ஆச்ரமத்துக்குச்சென்று சாப விமோசனம் பூர்வாவ தாரத்தில். இங்கு தவழ்ந்து சென்று சாப விமோசனம். இரண்டு இடங்களிலும் தேவகோபமும் காரியமுமே- யாகும், இன்னுரென்று யாருக்கும் தெரியாததால் கயோ- ஸ்சித் என்கிருர். தாமோதர லீலா ரஸத்தை ஆமோ தரமறிய.

निकटेषु निशामयामि नित्यं
निगमान्तैरधुनाऽपि मृग्यमाणम् ।
यमलाजुर्नदृष्टबालकेलिं
यमुनासाक्षिकयौवनं युवानम्

நிகடேஷு நிசாமயாமி நித்யம்
நிகமாந்தை ரதுநாபி ம்ருக்யமாணம்
யமளார்ஜுந த்ருஷ்ட பால கேளிம்
யமுநா ஸாக்ஷிக யௌவநம் யுவாநம் (8)

நிகமாந்தை: அதுநாபி ம்ருக்யமாணம் யமளார்ஜுன த்ருஷ்ட பாலகேளிம் யமுநாஸாக்ஷியௌவநம் யுவாநம் நிகடேஷு நித்யம் நிரூமயாமி என்று வரிசை படுத்திப் பொருள் கொள்ள வேண்டும்.

வேதாந்தங்களால் இன்றும் தேடப்படுபவனும் இரட்டை அர்ஜுன மரங்களால் கண் கூடாகக் காணப்பட்ட பால்ய லீலைகளை யுடையவனும் யமுனை சாக்ஷியாக யௌவனத்- தைப் பெற்றிருப்பவனுமான இந்த யுவாவை என்னருகி- லேயே நித்யம் கண்டு கொண்டிருக்கிறேன் என்று கருத்து.

எங்கும் ராமனைக் கண்டான் மாரீசன். அவன் கண்டது பயத்தால். ஒவ்வொரு மரத்திலும் கண்ணனைக் கண்டனர் ஆயர்பாடி ஆரணங்குகள். அவ்வாறின்றி என்னருகிலேயே பார்க்கின்றேன் என்கிறார்.

இவன் இன்றளவும் தேடப்பட்டவன் வேதங்களால். கண்டு பிடிக்க இயலவில்லை. இது குறையல்ல. இங்கு அபி என்ற சொல் உள்ளது. நிகமாந்தை: என்பதுடன் சேர்த்தால் வேதாந்தங்களாலும் என்று பொருள்படும். ம்ருக்யமாணம் என்பதுடன் சேர்த்தால் ம்ருக்யமாணமபி தேடப்பட்டபோதிலும் என்று பொருள் தேரும், அதுநா இப்பொழுது நிகடேஷு நிராமயாமி என்று பொருள் கொள்வதும் உசிதமே.

இரட்டை அர்ஜுனமரங்கள் கண்டன பால்யலீலைகளை என்கிறார். மரங்களுக்கு கண்களில்லை. எவ்வாறு காண முடியும் ! மரங்களுக்கு வேறு பெயர்கள் இருப்பினும் அர்ஜுன சப்தத்தை ஸ்வாமி இங்கு கொள்வதிலும் ரஸம் உண்டு. படியாய் கிடந்து பவளவாய் காண்பது போல் என்று ஏற்கலாம். பால கேளியைக் கண்டாருளர். பகவத் ஸம்பந்தத்தினுல் ஜடமும் காணும் பெருமை பெற்று விடும் போலும். அசக்ஷு: பஶ்யதி, அகர்ண: ஶ்ருணோதி என்ற ப்ரம்ஹஸ்வபாவம் இம்மரங்களுக்கும் ஏற்பட்டுவிட்டன. வனங்களாகிற தேவதைகளை ஸாக்ஷியாக அழைத்தாள் ஸீதை. ஶாபானுபவகாலத்தில் சைதந்யமும் தொடரும் போலும். விமோசநகாலமும் இவர்களுக்குத் தெரியுமே. ஆதலால் பால்யலீலைகளுக்கு சாக்ஷிகள். பலம் அதிகம் முன் ச்லோகத்திற்கு உலூகல கர்ஷ- ணத்தில் ப்ரதான நோக்கு, இங்கு தாமோதர லீலா- ரஸத்தில் நோக்கு. அர்ஜுனனுல் பார்க்கப்படாத பால்ய- லீலை. யமளார் ஜுனங்களால் பார்க்கப்பட்டது என்பது ரஸம்.

நிகடேஷு : அருகிலேயே அக்குமாரனை ஸேவிக்கிறேன் ஒருநாள் தோன்றி மறைவதில்லை. யத்ருச்சா ஹரியல்லவே. எதை எல்லோரும் ப்ரார்த்திப்பரோ அது எனக்கு கிடைத்து விட்டது. அக்ரத : ப்ருஷ்டத ! பார்ச்வத : எனக்கு கிடைத்து விட்டது. அக்ரத : ப்ருஷ்டத ! பார்ச்வத : என்னுமாப் போலே யாகலாம். பிறர் கண்டதைத் தான் அனுஸந்திப்பது என்றல்லாமல் தானே காண்கிறேன் என்கிருர். மா கங்காம் மா குரூன் கம: என்பர். க்வாஸி என்று அலறவேண்டியது மில்லை. அத்ருச்யமான வஸ்து த்ருச்யமாயிற்று. இதற்காக ஒரு திவ்ய சக்ஷுஸ்ஸை அபேக்ஷிக்கவில்லை போலும். இந்த வஸ்துவின் ஏற்றம் தான் என்ன ? இது வேதாந்தங்கள் தேட நின்றது. தேடுகின்றன தேடிக்கொண்டே இருக்கின்றன, இன்றும் அப்படியே ! வேதாந்தங்களைக் கொண்டுதான் அவனை அறிய வேண்டும். யதோ வாசோ நிவர்தந்தே என்பர். வேதாந்தங்கள் தேடிக்கொண்டிருப்பதை வேதாந்த தேசிகன் கண்டு கொண்டார். இது ரஸம், காலையில் பால்யலீலை. பகலில் யமுனையில் யௌவனலீலை. காலத்துக்கு அப்பாற்பட்டது கௌமாரம் யௌவனம ஜரா என்பது க்ரமம். அந்த க்ரமம் இங்கு இல்லையே : நித்யயுவா என்ருல் கௌமாரம் எப்படி ? ஸ்த்தலபேதம், காலபேதம், அவஸ்த்தாபேதம், அதிகாரி பேதம். அர்ஜுன மரங்கள் பாலகேளியைப் பார்க்கின்றன. பெயரிஞலேயே ஒருவித மோகம். இரட்டையானதால் பாலகேளிக்கு இரண்டு சாக்ஷிகள். தான் கட்டுண்டு சாபக்கட்டை அவிழ்த்து விட்டான், இந்த சாக்ஷிகள் தேவலோக வாஸிகள். இனி ஆற்றங்கரை, அங்கு அச்சிறுவன் யுவாவாஞன். அவன் ஸ்வதந்த்ரன். அவன் யுவாவென்று எங்ஙனே அறிவது ? யமுனைதான் ஸாக்ஷி . அவள் யுவதி, ஸூர்யனின் மகள், ஒரு பெண் ஸாக்ஷிக்குப் பலம் அதிகம். பாலக்ரீடையே ஸேவிக்காதவன் அர்ஜுனன். அவன் ஸேவித்த் ஸேவையை உபஸம்ஹரிக்க ப்ரார்த்தித்தான். இங்கு அர்ஜுன மரங்கள் தமது ரூபத்தை உபஸம் ஹரித்து ஸேவித்தனபோலும் ! இங்ஙனே பல.

पदवीमदवीयसीं विमुक्तेः
अटवीसंपदमंबुवाहयन्तीम् ।
अरुणाधरसाभिलाषवंशां
करुणां कारणमानुषीं भजामि

பதவீ மதவீஸீயம் விமுக்தே:
அடவீ ஸம்பத மம்புவாஹயந்தீம்
அருணதர ஸாபிலாஷ வம்சாம்
கருணாம் காரணமாநுஷீம் பஜாமி (9)

விமுக்தே: அதவீயஸீம் பதவீம், அடவீ ஸம்பதம் அம்புவாஹயந்தீம், அருணதர கஸாபிலாஷவம்சாம் ஸாரணமாநுஷீம் கருணாம் பஜாமி, என்று வரிசைபடுத்திப் பொருள் கொள்க.

முத்திக்கு நெருங்கிய வழியானதும், வனஸம்பத்தைப் பெருக்கும் மேகமாயிருப்பதும், சிவந்த அதரத்தில் (உதட்டில்) ஆசைகொண்ட புல்லாங்குழலையுடையதும் காரணத்துக்காக மனித வேஷம் பூண்டதுமான கருணையை தஞ்சமடைகிறேன் என்று கருத்து.

பதவீம் : காலையில் பாலகேளி, பகலில் யுவா, இதற்குப் போதியசாக்ஷிகள். கதம் ! கோகுலமேஷ்யதி ! ஸஞ்சாரம், எல்லோருக்கும் பலன். வர்ணாச்ரமாசார வ்யவஸ்தையும், கர்மயோகாதி வழிகளில் உழல்வதுவான தூரவழியில்லாது முத்திக்கு வழியெல்லாம் கடந்தோம் வானேறும் வழி கண்டோம் என்ற பூரிப்பு. த்ராகீயஸீ பதவீ என்கிறார். தயயா ஸஹ த்வம் நேதும் யதஸே என்பர். ஆதலால் கண்ணனே வழி, சுழல வைக்காமல் மாமேவ யே ப்ரபத்யந்தே என்றான் அவன் ஒருவன். வனஸம்பத்து விளங்குகிறது. அயோத்யாம் அடவீம் வித்தி என்றாள் ஸுமித்ரை. புண்ய : புஷ்பித-கானன: என்பர். அவனத்துக்கு வந்தவனுக்கு வனமே செல்வமாயிற்று. ரமாக்ரீடமாயிற்று என்றார் சுகர். நகரத்தில் பெய்யும் மழையைக் காட்டிலும், காட்டில் பெய்யும் மழை செல்வத்தை அளிக்கும். தெய்வ வழி பாட்டிற்கு ஏற்ற இடம். தெய்வமும் அதையே வழிபட்டது. வீக்ஷாரண்யம், வகு ளாரண்யம் சம்பகாரண்யம் என்னுமாப்போலே ஆரண்ய க்ஷேத்திரங்களில் உகந்து எம்பெருமான் நிலைத்து நிற்கும். நீரெல்லாம் ஏற்று சென்ற திருமாலே ! என்று வியந்துப் பாடினர். முத்தி மழைபொழியும் முகில் வண்ணன் கண்ணன், பெய்யுமாமுகில்போல் வண்ணா. என்றாள் கோதை. மேகம் என்றால் ஆழி மழைக்கு அண்ணா- வாக வேண்டாவோ ! செவ்விதழ்ப்பவளவாயன். இதில் இருவரில் போட்டி, சங்கும் புல்லாங்குழலும் இப்பேறு பெற்றவை. சங்கில் மயங்கினாள் திருப்பாவை. திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித்திருக்குமோ என்பாள். விரக்தரின் அனுராகத்தையும்

ஸம்பாதித்து விட்டது அருணதரம். வம்சேந ஸங்க்கபதிநா ச நிஷேவிதம் தே பிம்பாதரம் ஸ்ப்ருசதி ராகவதீ மதிர் மே என்பர் அவ்விரக்தர். புல்லாங்குழல், அதன் அபிலாஷை பூர்த்தியாயிற்று. வம்சத்தின் பல அம்சங்கள் யோக்யமானவை, பிற மரங்களுக்கு கிடைக்காமல் இதற்கே வம்சம் என்ற பெயர் கிடைத்ததே !

வைணவதண்டத்தையே தங்கள் துறவுக்கு காரண- மாகக் துறவிகள் ஏற்றனர், எல்லாம் வெறுத்தவர்கள் இதை ஏற்பது விந்தைதானே ! வைணவ வம்சம் ஒன்று தானே வம்சம் அசேதனமான வேணுவும் அபிலாஷை கொண்டது. எம்பெருமான் திருவதரபானம் பண்ண என்றால் இதனிலும் வம்சத்தின் சிறப்புதான் யாது? வனத்தில் ஸஞ்சரிப்பவன் அங்கு ஸ்வாபாவிக மாகவே கிடைப்பவைகளையே பெற்று நிறைவு பெறுகிறான். அங்குள்ளவை போக்யமாகின்றன. அதனாலன்றோ புல்லாங்- குழல், மயில்தோகை. வனமாலை குந்து மணி முதலானவை பெரும் பதம் பெற்றன ! கருணை காரண மனுஷன் வடிவத்தில் தோன்றியது. ஆழி மழைக் கண்ணன் ஊழி முதல்வனே. வைஷம்ய நைர்க்ருண்யங்கள் இல்லாதது மேகமும் மேகவண்ணனும். மேகம் த்ருஷ்டி கோசரம் ஆதலால் இவ்வாறு அனுபவம், இவனை ஆச்ரயிக்கிறேன், காரணன் நீயே நாரணன் ஆதலின் என்பர்.

अनिमेषनिषेवणीयमक्ष्णोः
अजहद्यौवनमाविरस्तु चित्ते ।
कलहायितकुन्तलं कलापैः
करणोन्मादकविभ्रमं महो मे

அநிமேஷ நிஷேவணீய மக்ஷ்ணோ :
அஜஹத் யௌவந மாவிரஸ்து சித்தே
கலஹாயித குந்தளம் கலாபை :
கரணோந்மாதக விப்ரமம் மஹோ மே (10)

அக்ஷ்ணோ: அநிமேஷநிஷேணீயம் அஜஹத்யௌ- வநம் கலாபை: கலஹாயிதகுந்தலம் கரணோந்மாதக விப்ரமம் மஹ: மே சித்தே ஆவிரஸ்து என்று வரிசைப் படுத்திப் பொருள் கொள்ள வேண்டும்.

கண்களாலே இமை கொட்டாமல் ஸேவிக்கத்தக்கதும், யௌவனத்தை விடாமல் இருப்பதும், மயில் தோகை- களால் போரிடும் முன்னுச்சி மயிர்களையுடையதும், புலன்களைப் பிச்சேற்ற வல்லதுமான அப்பெரும் சோதி எனது உள்ளத்தில் தோன்றட்டும் என்று கருத்து.

அநிமேஷ : யௌவனம் தொடருகிறது. அனுபவமும் அப்படியே. யௌவனம் மலருகிறது, திருமேனிப்பாங்கு தான் என்னே ! அழகன். கிழவனுகியும் மணாளன் ஆனுல். இங்கு கேட்கத்தானுமோ ! கௌமாரத்தில் யௌவனம். கண்களுக்கு விருந்தான திருமேனிப்பாங்கு. என் கண்ணினு ளானே என்பர், கண்ணல்ல கண்டாமே என்றும் கூறுவர், காணு கண் என்றும் சாற்றுவர், கண் இமைத்துக் காண்பார் தாம் கண் என்ன கண்ணே ! இவனையல்லவோ காண வேண்டும். கண்ட கண்கள் மற்ருென்றினைக் காணு! நம்பியைக்காண ஆயிரம் நயனம் வேண்டும் ! வேண்டுமா! ஆயிரம் நயனம் படைத்தவர்களும் ஒரு கண் அதிகமாகப் படைத்தவனும் அனுபவிக்க முடிய- வில்லை எனில் இரண்டே போதும் ஆனுல் ஒன்றுமட்டும் வேண்டும். இமைத் தல் மட்டும் வேண்டா. ராமம் மே அநுகதா த்ருஷ்டி: அத்யாபி ந நிவர்த்ததே என்ற நிலையும் வேண்டா. பச்யேம ஶரத: ஶதம், நந்தாம ஶரத: ஶதம், மோதாம என்பதும் ஆகலாம்.

அநிமேஷர்கள் தேவர்கள், அவர்களுக்கு போக்யமானது. இது மஹஸ். ஜோதிஸ். இதை எப்படி கண்களிமைக்காமல் பார்ப்பது, திவ்யம் ததாமி என்ருல். உபஸம்ஹர என்ன வேண்டிவருமோ ! த்ருடி யுகாயதே த்வாமபஶ்யதாம் என்ற நிலை. அது அதர்சனத்தில் சொல்லப்பட்டது, இது தர்சனத் திலாம். அக்ஷ்ணோ: என்ற த்விவசனம் பரம ரஸவத்தாகும்.

அபிநவ யௌவனத்வம் போலன்றிக்கே. இது அஜஹத் யௌவனமாகிறது. அஜஹத்ஸ் வஸ்வபாவனன்ரே இவன் யௌவனம் நித்யமானது. கௌமாரம் ஜஹதுர் வ்ரஜே என்ருர் சுகர். அது யௌவன விஷயத்திலல்லவே என்பர் ஸ்வாமி தேசிகன். நவநீத நாட்யம் தோன்றட்டும் என்று முன்பு கூறப்பட்டது. அதே ஆவிர்ப்பாவம் கண்களோடு நிற்காமல் உள்ளத்திலும் தோன்றட்டும் என்பது இங்கு ப்ரார்த்தனை.

செவியின் வழியே புகுந்து அகத்தில் இருக்கலாம். இங்கு கண்கள் வழியே புகுந்து நிற்பாய் என்கிறூர். பரபாகாதிசயம் பரமபோக்யம். குந்தளத்துக்கு ஏற்றதான கலாபம். கலாபம் மயில் கண், அதற்குப் பெயரே கலாபம், கலாபம்-கலஹம் மலிந்தது, அபவாதம் அருகில் இருப்- பதையே பாதிக்கும், அதோடு இணைந்தது குந்தளம், அதற்கு நேர்மை இல்லை. குடிலகுந்தளம் என்று பேர்போனது. குடிலகுந்தளம் ஸ்ரீமுகம் ச தே என்றனர். சோலீ வசன குடிலை : குந்தளை : என்றூர் ஸ்வாமி தேசிகனும். கலாபத்துக்கும் குந்தளத்துக்கும் சண்டை.

ஸர்வர்யஸெள குடில குந்தள காந்திரூபா என்றூர். கலஹம் இருந்தால்தான் யெளவன ரஸம் அதிகம். இதை பரம லாபமாகக் கருதினூர் சுகரும். பல நிறம் படைத்து உச்சியின் மேல் விளங்குவதால் நான்தான் பெருமை- யுடையவன் என்பது கலாபம். திருமேனியோடு இணைந்து தலையை தூக்கி நிற்காமல் முகச்சோதியையே தழுவி நிற்பதே பெருமை என்பது குந்தளம். ரஸிக போக்யமான பல விஷயங்கள். இவையெல்லாம் கலந்து நம்மைப் பிச்சேற்றுகின்றன. ந ஆத்மாகாராணி ஸஸ்மரு: என்றூர். எழுமையும் பித்தனே. பிறருடைய இந்த்ரியங்கள் இந்த மஹஸ்ஸைக் கண்டவுடன் வலுத்தும் வலுவிழுந்தும் போகின்றன. உன்மாதம் ப்ரமம் எல்லாம் போக்யமாகும்.

अनुयायिमनोज्ञवंशनालैः
अवतु स्पर्शितवल्लवीविमोहैः ।
अनघस्मितशीतलैरसौ मां
अनुकंपासरिदंबुजैरपाङ्गैः

**அநுயாயி மநோஜ்ஞ வம்சநாளை:**
**அவது ஸ்பர்சித வல்லவீ விமோஹை:**
**அநக ஸ்மித சீதளை ரஸெள மாம்**
**அநுகம்பா ஸரிதம்புஜைரபாங்கை: (11)**

அஸெள அநுயாயிமநோஜ்ஞவம்சநாளை: ஸ்பர்ஸித வல்லவீ விமோஹை: அநகஸ்மித ஸீதளை: அநுகம்பா ஸரிதம்புஜை: அபாங்கை: மாம் அவது என்று சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும்.

அந்த பகவான் கடைக்கண் பார்வைகளாலே என்னை ரக்ஷிக்கட்டும். கடாக்ஷங்களின் பெருமை தான் என்ன! பின் தொடருகின்ற அழகான புல்லாங்குழல்களையுடைய- வை. அதனால் இடைச்சிகளுக்கு மோஹத்தை உண்டு பண்ணினவை. தூயதான புன் சிரிப்பால் சில்லென்றிருப்- பவை. அன்றியும் தயையெனும் ஆற்றில் முளைத்த தாமரை மலர் போன்றவை அவனது கடைக்கண் பார்வைகள் என்று பொருள். குழலூதும் கண்ணன் தனது கடைக்கண் பார்வைகளால் என்னைக் காப்பாற்றட்டும் என்று கருத்து.

அனுபாயி : பிச்சேற்றவல்ல இவ்வழகுடையவன் என்னைக் காப்பாற்றட்டும் என்கிறார். வந்தாய் என்மனம் புகுந்தாய் மன்னி நின்றாய் இனிப்போயறியாய் என்றும் இனி நான் உன்னை என்றும் விடேனே என்றும் பேசு- வாருண்டு. அவன் உள்ளத்தில் தோன்றினான், மனது அவனால் நிறைந்து விட்டது. இது எப்புலனோடும் இணையாமல் எம்பெருமானிடமே ஒன்றிவிட்டது. வேறு புலன்கள் மனதுடன் இணைப்பு கிடைக்காமல் செயல் படுகின்றன. வாய் ஒன்று பேசும், கண் ஒன்றைப் பார்க்கும், காது எதையோ கேட்கும், ஒன்றுக் கொன்று ஸம்பந்த மில்லாத நிலை. என் செய்வது! இனி இவ்வெம் பெருமானே காப்பாற்றவேண்டும். எப்படி நாம் பிழைப்பது? வழியாயில்லை! அத்புதமான கல்பனாரஸம் இந்த ச்லோகத்தில். அனுகம்பை என்பது ஒரு ஆறு. அதில் தோன்றிய தாமரை மலர் கடைக்கண், இது இருக்க நமக்கு பயமேன்! கடைக் கண்பார்வை புல்லாங்குழலில் ஆரூலா- க்ரம் படுகிறது, அது ஊதி அழைக்கிறது. அந்த குழலோசை கேட்க கோபிகள் மோகித்து நிற்கின்றனர். அழிக்கவந்த தல்லவே அனகமான தூயதான புன்முறுவல் மேலும் அப்பார்வையையே குளிரச்செய்கிறது. அதனால் நம்மை காப்பாற்றுகிறான் என்கிறார். அழகான சித்திரம். குழலூது பவன் கையில் குழலை ஏந்தி ஊத ஆரம்பிப்பான். அப்பொழுது விரல்கள் தடவிப் பறிமாறும், குழல் நுணியிலிருந்து ஸ்வர சிக்ஷை பண்ணி சரிக்கட்டின வுடனே முகமலர்ச்சியோடு ஊத ஆரம்பம் செய்வான். அது மூர்ச்சனா ஸ்த்தானத்தை அடையும் பொழுது அருகில் ரஸிப்பவர் உளரோ எனப்பார்வையை வெளியில் செலுத்- துவான். செவியாட்ட கில்லாத நிலையையும் குழலோசை கேட்டு மயங்கி மூர்ச்சனையை அடைந்து குவிந்து கிடக்கும் பாங்கியர் கூட்டத்தைக்கண்டு, தானும் தன் க்ருஷி பலித்தது என்று எண்ணி மேலும், காலத்தாலும் தேசத்தாலும் தூரமாயிருப்பவர்களையும் அழைக்கும் பாங்கில் புன் முறுவலோடு ஊதுவான். இந்த பர்வக்ரமம்

இங்கு காணப் படுகிறது. அனுகம்பா என்றால் தயை, இதை மலையாகக் கூறினார், இதை இங்கு ஆறாக நிரூபிக்கிறார். கருணையே திருவுடம்பு என்றார் முன் சுலோகத்தில். எல்லோரையும் நீராக்கும் திருமேனியாத-லால் இத்திருமேனி ஆறாகலாம். அதில் திருக்கண்கள் தாமரையாம். அதன் தோற்றம் பார்வை மலர்ச்சியாம் என்றும் கூறியபடி.

अधराहितचारुवंशनालाः
मकुटालम्बिमयूरपिञ्छमालाः ।
हरिनीलशिलाविभङ्गनीलाः
प्रतिभाः सन्तु ममान्तिमप्रयाणे

அதராஹித சாரு வம்ச நாளா:
மகுடாலம்பி மயூர பிஞ்ச்ச மாலா:
ஹரிநீல சீலா விபங்க நீலா:
ப்ரதிபா ஸ் ஸந்து மமாந்திம ப்ரயாணே (12)

அதராஹித சாருவம்நாளா: மகுடாலம்பி மயூரபிஞ்ச்ச மாலா: ஹரிநீலஸிலாவிபங்க நீலா: ப்ரதிபா: மம அந்திம ப்ரயாணே ஸந்து என்று சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும்.

திருவதரத்தில் அமர்த்தப்பட்ட அழகான புல்லாங்- குழல்களும், கிரீடத்தில் அமைக்கப்பெற்ற மயில்தோகை வரிசைகளும், இந்த்ரநீலக்கல் பிளந்தது போன்ற கருப்புகளும் எனது அந்திம ப்ரயாண சமயத்தில் தோன்ற வேண்டும் என்று கருத்து.

யௌவனத்தின் முதல் அவஸ்தையில் கண்ணனுடைய ஸேவை அபூர்வமானது. அத்புதமானது. இந்த ஸேவை இன்றோடு மறைந்து விடாமல் அந்திமப்ரயாண காலத்- திலும் ஸ்புரிக்கவேண்டும் என்கிறார்.

திருவதரத்திற்குத்தனிச்சோபை உண்டு. புல்லாங்குழல் அதில் இடம் பெற்றபொழுது மேலும் தனி அழகு கூடுகிறது. சாருவான வதனத்தில் சாருவான புல்லாங்குழல். புல்லாங்குழலும் உதடும் பரஸ்பரம் அழகை கூட்டிக் கொண்டன. தூரத்தில் இருந்தும்

குழல்கள் ஸேவையா- கின்றன. புல்லாங்குழல் தென்பட்டால் கண்ணன் நினைவு தானே வரும். ஆதலால் அது முதல் வரிசையாக காட்சி யளிக்கின்றன. மகுடத்தினை அழகு படுத்துகிறது. கொண்டையில் செருகிய தோகை. கொண்டையால், மயில் தோகையும் மயில் தோகையால் கொண்டையும் அழகினைப் பரிமாறிக் கொள்கிறது போலும். மயில் கண்கள் வரிசை வரிசையாக கண்களில் பட வேண்டும். குழல் வரிசைகள் மயில்கண் வரிசைகள், இந்திர நீல மணிச் சிதறல் போன்றது பளிச்சிடும் திருமேனி வரிசைகள் ஒன்றன் பின் ஒன்றாக ஸேவை ஸாதிக்க வேண்டும். அந்தி ஸ்மரணம் அவச்யமில்லை என்றாலும் ஸ்மரணம் வந்தால் தடுக்கத் தானுமோ ! ப்ரயாண காலத்திலும் இடை விடாமல் ஸேவையாக வேண்டும் என்பது உசிதமே. இங்கு மமாநிசம் முராரே: என்று அனுஸந்திப்பதும் உண்டு. இங்கு ஸ்தோத்ரத்தின் நடுவில் அந்திம ப்ரயாணே என்பது ஏன் என்று சிலர் எண்ண இடம் உண்டு. ச்ருங்காரஸமாதியில் 12 நிலைகள். கடைசியில் 12 வதாக மரணம் எனப்பட்டது. இவ்வழகில் ஈடுபட்டு ஸஞ்ஜ்வரம் ஏற்பட்டு அதன் விளைவாக அந்திம ப்ரயாணம் ஏற்பட்டு விட்டால் இந்த ஸேவைகள் தான் வேண்டும் என்று வேண்டுவதாக கொள்ளலாம். அபாங்கை: என்ப முந்திய ச்லோகத்தில் ப்ரார்த்தித்தது. இங்கு ப்ரதிபா: ஸந்து என்று ப்ரார்த்திக்கிறார்.

அதராஹித : எம்பெருமாள் திருவதரவழகிலே தோய்ந்த உள்ளத்தரான ஸ்வாமி தேசிகன் இந்த ஸேவை என்றைக்- குமே வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறார். நிரந்தரம் என்ற சுலோகத்தில் வைகுந்தவாஸத்திலும் வேண்டாமை ஏற்பட்டது என்பர். இங்கு விலக்ஷணமான அனுபவம். ப்ரயாணகாலேபி ச மாம் என்றான். தேர்தட்டில் அவனே சொன்னதால் அந்த அனுபவம் ப்ரார்த்திக்கப்படுகிறது.

அந்திமப்ரயாணே என்கிறார். பூர்வம் அப்யஸ்தமான விஷயம் அப்பொழுது தோன்றும். திடீரென்று எம்பெரு- மான் உருவம் தோன்றுமோ ! ப்ரயாண காலத்திலும் இத்திருமேனி தோன்றவேண்டும் என்கிறார். காலத்தைப் போல் தேசமும் இங்கு கொள்ளலாம். ப்ரதிபா : என்பதற்கு நினைவுறுத்தக் கூடிய சாதனங்கள் என்று பொருள்: வழி நடப்பவர்களுக்கு சில அடையாளங்கள் உண்டு. இவ்வளவு தூரம் வந்திருக்கிறோம். இன்னும் இவ்வளவு தூரம் செல்லவேண்டும் என்பதை அறிவுறுத்துபவை அவை.

தெளிவாகச் சொன்னால் மைல் கற்கள் பர்லாங்கு கற்கள் என்பதைச் கூறலாம்.

இங்கு செல்லவேண்டிய தேசம் அப்ராக்ருதம். இதற்கு முன் சென்று வந்ததல்ல, இங்கும் எம்பெருமானே அடையாளங்களாக அமையவேண்டும் என்று ப்ரார்த் திக்கிறார். அர்ச்சிராதி மார்கம், அங்கே பல திவ்யமான காக்ஷிகள். நூறு நூறு பேராக மாலை, சந்தனம், சூர்ணம், வாஸஸ், குடை. சாமரம் முதலியன ஏந்தி வரவேற்பளிப்பர், இதெல்லாம் வேதாந்தங்கள் கூறும் உண்மை. ஸ்வாமி தேசிகன் இங்கு ஒருப்படி அதிகமான தனக்கே உரியதான அனுபவத்தைக் கூறுகிறார். வழிநெடுகிலும், அமானவாதி ஸ்பர்சமே போக்யம் என்றிராமல் அங்கும் எம்பெருமானே கண்ணனையே காண வேண்டும் என்பதே அப்பேரவா, இதை விளக்கும் சுலோகம் இது. முதலில் புல்லாங் குழலின் வரிசைகள். இது தனது ஓசையினால் தெம்பை ஊட்டுகிறது. இது ச்ரோதவ்ய: என்ற ச்ரவண ப்ரத்யக்ஷ நிலை. அடுத்து மயில் (தோகை) கண், அது சாக்ஷுஷ ப்ரத்யக்ஷம். பிறகு நெருங்க நெருங்க, இந்திரநீல கல் போன்ற திருமேனிகள். இவை வழிநெடுக அமைந்த அடையாளங்கள். தத்க்ரதுந்யாயத்தில் ப்ரேத்ய பவதி என்பதற்கு பரிஷ்காரமுமாகலாம். இங்கு அங்கு என்று இரண்டு இடங்களை மட்டும் வரையறுத்துச் சொல்லி விட்டால் நடுவில் உள்ள காலதேசங்களில் பகவதனுவம் பாதிக்கபடுமே ! அவ்வாறாக ஆகவேண்டாம் என்றபடியாம். நாலா : மாலா: நீலா : என்பது ரஸம்.

अखिलानवलोकयामि कालान्
महिलाधीनभुजान्तरस्य यून :।
अभिलाषपदं व्रजाङ्गनानाम्
अभिलापक्रमदूरमभिरूप्यम्

அகிலாநவலோகயாமி காலாந்
மஹிளாதீந புஜாந்தரஸ்ய யூந :
அபிலாஷபதம் வ்ரஜாங்கநாநாம்
அபிலாபக்ரமதூரமாபிரூப்யம் (13)

மஹிலாதீநபுஜாந்தரஸ்ய யூந: வரஜாங்கநாநாம் அபிலாஷபதம், அபிலாபக்ரம தூரம்ஆபிரூப்யம் அகிலாந் காலாந் அவலோகயாமி. என்று வரிசைபடுத்திப் பொருள் கொள்க.

ஒரு தேவிக்கு அதீனமான திருமார்பையுடைய யுவாவின், ஆயர் பெண்கள். அனைவராலும் விரும்பப் படுவதும், சொல்லுக்கு நிலமல்லாததுமான அழகினை எப்பொழுதும் கண்டு கொண்டே யிருக்கிறேன் என்று கருத்து.

அகிலான் : அந்திம ப்ரயாண ப்ரதிபைகளை முன் சுலோகத்தில் ப்ரார்த்தித்தார். எம்பெருமான் என்றுமே சேவை சாதிக்கத் தொடங்கினான். அவன் அழகன். புவனஸுந்தரன் என்றழைத்தாள். ரூபம் அகிலார்த்தலாபம் என்றார் சுகர், அஸ்ப்ருஷ்ட சிந்தாபதம் ஆபிரூப்யம். இதற்கு ஏற்றம் இரண்டு வகையில். பிராட்டி அகலகில்லேன் இறையும் என்றாள். ஸ்வதந்திரனான எம்பெருமானின் ஸ்வாதந்த்ரியம் சில இடங்களில் முதலே போகிறது. இரண்டு புஜங்களுக்கு இடையில் உள்ள பாகம் ஒரு பெண்ணால் ஆக்ரமிக்கப்பட்டுவிட்டது. அதை ஸ்வாதீனம் செய்துக் கொள்ளமுடியாத நிலை. அவன் யுவா, அவள் யுவதி. விஷ்ணோ : ஸ்ரீரநபாயிநீ. வ்ரஜத்தில் உள்ளவர்கள் பெண்கள், அவர்கள் ஆசைப்பட்டு அடைகின்றனர். பரிவ்ராஜகர்கள் பதிஸு தாந்வய ப்ராத்ரு பாந்தவர்களை விட்டுவிடுவார்கள் எப்படியோ அப்படியே வ்ரஜ பரிவ்ராஜிநிகள். அவனையல்லாது வேறொன்றையும் காணாத சிறந்த நிலை. அபிலாஷைக்கு இடமான அழகு, அபிலாபத்- துக்கு - சொல்லுக்கு நிலமாகாமல் போனது ஆச்சரியம். இதை எல்லா காலத்திலேயும் பார்க்கிறேன் என்கிறார். ஸதா பச்யந்தி என்றவாறு ஸ்ரீவைகுண்டனுபவமும் கூறப்பட்டதாம். அகிலான் காலான் என்பதை மஹிலாதீன புஜாந்தரஸ்ய என்பதோடும் சேர்க்கலாம்.

**हृदि मुग्धशिखण्डमण्डनो**
**लिखितः केन ममैष शिल्पिना।**
**मदनातुरवल्लवाङ्गना**
**वदनाम्भो जदिवाकरो युवा**

ஹ்ருதி முக்த சிகண்ட மண்டந:
லிகித: கேந மமைஷ சில்பிநா
மதநாதுர வல்லவாங்கநா -
வதநாம்போஜதிவாகரோ யுவா (14)

முக்த சிகண்ட மண்டந: மதநாதுர வல்லவாங்கநா வதநாம்போஜதிவாகர: யுவா கேந சில்பிநா மம ஹ்ருதி லிகித: ! என்று சேர்த்துப்பொருள் கொள்க.

அழகான மயில் கொண்டையை அணிகலமாகக் கொண்டவனும் காமத்தால் பீடிக்கப்பட்ட ஆயர்பெண்- களின் முகங்களாகிற தாமரை மலர்களை மலரச் செய்யும் கதிரவன் போன்றவனுமான அந்த யுவா என் இதயத்தில் எந்த சில்பியால் எழுதப்பட்டான் ! என்று கருத்து.

ஹ்ருதி : கண்கள் கண்டன. அவை க்ருதக்ஞதையுடன் உள்ளே நிலைக்கும்படி செலுத்திவிட்டன. தோகையில் மோகம். மயில் கண்ணிலேயே கண். அகலாத ஓவியம், அழியாத அழகு, ரமணீயம் ப்ரஸன்னம்பு ஸன்மனுஷ்ய மனது. உள்ளத்தில் எழுதுவது மிகவும் கடினம். உள்ளம் அசைவுடையது. அதில் ஸ்திரமான சித்திரம், எத்திறம் ! மயனும், மாரீசனும் அல்ல இவ்வித்தைக்காரன். ஆனகதுந்துபியின் மனதில் ஆவேசித்தது, இச்சித்திரப் பொருள் என்றார் சுகர். உள்ளுவார் உள்ளத்தான், லிகதீவ சித்தே என்பார் ஸ்வாமியும். எழுதுபவன் வேறு எழுதப் படுபவன் வேறு. விச்வசில்பி விச்வமே அவனது சில்பம். விளையாட்டென்னும் எழுதுகோலால் கருணையென்னும் மை தோய்த்து உலகத்தை உருவாக்குவான் பணக்கார சிற்பி என்றார் அப்யுதயத்தில். எழுதப்பட்டது தெரிந்து விட்டது. எழுதியவன் யாரோ தெரியவில்லையே ! வியப்பு, பூரிப்பு, உள்ளத்தில் எழுதியவன் ஜெகசிற்பி. அவன் அவனாகத்தான்வேண்டும். உள்ளத்தெழுதியதை ஓலையில் இட்டனம், யாமிதற்கென் என்பார். எழுதியவன் அவனே. அவனே எவனேலுமாம். அவன் மறைந்தான். முகங்கள் வாடின. அவன் தோன்றினான் முகங்கள் மலர்ந்தன. தோன்றும்பொழுது ஸ்மயமானமுகாம் புஜனாகத் தோன்றி- னான். அது கண்ட வல்லவிகள் முகங்கள் மலர்ந்தன, சந்திரவம்சத்தில் தோன்றிய சூரியன் கண்ணன். இது ஆச்சரியம் தானே ! மதனாதுரர்களுக்கு நிசாகரன் போக்ய மாவான். திவாகரன் எங்ஙனேயோ ! ஆழிவண்ணர் வரும் பொழுதாயிற்று என்பர். இங்கு ஒரு ரஸம். தாமரையை மலரச் செய்ய

சூரியசக்தி ஒன்றிஞல் தான் இயலும். அங்ஙனமே கோபிகளின் முகமலர்ச்சி வேண்டு மாயின் கண்ணனின் தோற்றம் ஒன்றே அமையும் என்னவு மாம். கௌமாரத்தில் யௌவனம், யௌவனத்தில் புதுமை, இது போக்யம்.

महसे महिताय मौळिना
विनतेनाञ्जलिमञ्जनत्विषे ।
कलयामि विमुग्धवल्लवी-
वलयाभाषितमञ्जुवेणवे

மஹஸே மஹிதாய மௌளிநா
விநதேநாஞ்ஜலி மஞ்ஜநத்விஷே
கலயாமி விமுக்தவல்லவீ
வலயாபாஷித மஞ்ஜுவேணவே (15)

மஹிதாய அஞ்ஜநத்விஷே விமுக்த வல்லவீ வலயா-பாஷிதமஞ்ஜுவேணவே மஹஸே விநதேந மௌளிநா அஞ்சலிம் கலயாமி என்று சேர்த்துப் பொருள் கொள்க.

உலகப் புகழ் பெற்றதும் மைவண்ணத்ததும் அழகான ஆய்ச்சியரின் வளைகளின் ஒலிகளோடு பேசுகின்ற அழகான புல்லாங்குழலை உடையதுமான ஒப்பற்றதொரு சோதிக்கு தலை வணங்கி அஞ்சலி செய்கிறேன் என்று கருத்து.

மஹஸே : தாம என்றுர் முதல் சுலோகத்தில். இங்கு மஹிதமாயிற்று. அஞ்ஜனமும் காயாவும் அனையமேனி என்பர். அஞ்ஜனவண்ணன் ஜோதிவடிவாய் இருப்பதும், ஜோதிவடிவன் அஞ்ஜன வண்ணனுயிருப்பதும் மஹிமை. ஆதலால் இது மஹித மஹஸ், தலைவணங்கி அஞ்சலி செய்ய வேண்டும். அவன் யாசித்துச் செய்யவேண்டுவதில்லை. அஞ்ஜநாபம் நிரபாயமஸ்தி மே தனஞ்ஜய ஸயந்தனபூஷணம் தனம் என்றுர். வல்லவிகள் முக்தைகள், அவர்கள் கை வளையல்கள் குலுங்குகின்றன. அவனும் இனிய குழலை ஊதுகின்றான். அந்த வேணுகான ச்ரவண ஸௌபாக்யவதிகள் தாளம் வழங்குகின்றனர். வேணு நாதமும் வளையோசையும் ஒன்றுக்கொன்று

பேசிக் கொண்டிருக்கின்றன போலும்.

மஹஸ் என்கிறார், ஸ்வாமிக்கு கண்ணன் சோதி வடிவத்திலேயே தோன்றுகிறான். இங்கு அது மஹித- மாயிற்று. லீலாவிபூதியில் இருள் தருமாஞாலத்தில் ப்ரக்ருதி மண்டலத்தில் தோன்றியதால் இது மஹிதம் அவதார காலத்திலேயே அத்புதம் என்று அழைக்கப்-பட்டது. இந்த மஹஸ்-தேஜஸ் தலையை வணங்க- வைக்கிறது. அவனது மௌளி (சிரஸ்) சிகண்ட மண்டனமாய் தேர்ந்து நிற்கின்றது என்றார். அகலாத அழியாத ஈடில்லாத சித்திரம். இங்கு எனது மௌளி தானாகவே அதைக் கண்டு வணங்கி விட்டதே. தலையை வணங்கவைத்தது அது தான். ஆனால் நான் ஏதாவது செய்ய வேண்டாமா! அஞ்சலியன்றி வேறு இல்லையே.

மை எங்காவது ப்ரகாசிக்குமா! கருப்பில் சூரிய ஒளி. மதநாதுர வல்லவாங்கனைகள் என்றார் முன் ச்லோகத்தில். இங்கு விமுக்த என்கிறார் விசேஷமான மோஹத்தை அடைந்தவர்கள் இவர்கள், வேணுவும் வளையல்களும் ஒன்றுக்கொன்று பேசிக் கொள்கின்றன என்கிறார். த்வனிகள் பேசிக் கொள்கின்றன. வளையல்கள் வேணுவை பேசவைக்கின்றன. தாளமும் கீதமும் பேசுவது ஒத்துப் போவது இயற்கை. வேணு ஒன்று தாளங்கள் பல, தாளங்கள் தமக்கு அனுகூலமாக்கிக் கொள்கின்றன என்பதாம்.

जयति ललितवृत्तिं शिक्षितो वल्लवीनां
शिथिल वलयशिञ्जाशीतलैर्हस्ततालैः ।
अखिलभुवनरक्षागोपवेषस्य विष्णोः
अधरमणिसुधायांअंशवान् वंशनालः

ஜயதி லளித வ்ருத்திம் சிக்ஷிதோ வல்லவீநாம்
சிதில வலய சிஞ்ஜா சீதளைர் ஹஸ்த தாளை:
அகில புவன ரக்ஷா கோப வேஷஸ்ய விஷ்ணோ:
அதர மணி ஸுதாயா மம்சவாந் வம்சநாள: (16)

வல்லவீநாம் சிதில வலய சிஞ்ஜா சீதளை: ஹஸ்ததாளை: லலிதவ்ருத்திம் ஶிக்ஷித: அகில புவநரக்ஷா கோபவேஷஸ்ய விஷ்ணோ:

அதரமணி ஸுதாயாம் அம்சவாந் வநம்ஶ நாள: ஜயதி என்று வரிசை படுத்திப் பொருள் கொள்ள வேணும்.

ஜயதி : முன்பு வளையும் வேணுவும் பேசிக்கொண்டது, வளைக்குப்பெருமை ஏற்பட்டுவிட்டது, அது கோஷ்டியாக கிளம்பியது. தாளம் அமைந்துவிட்டது. திவம் அஸ்ப்ருசத் த்வனி: என்றார் சுகர். இங்கு ஹஸ்ததாளம். முன்பு தயிர் தாளம் போட்டது, அவ்வாறில்லை இது. நாதம் கிளம்பியது,. மெய் மறந்தனர் மங்கையர், வளைகள் உராய்கின்றன. ஒலிக் கின்றன. ஓயவில்லை தாளம், ஓயாததால் நாதமும் நிற்க வில்லை. எம்பெருமான் தன்னையும் மறந்து அழகான கதிய அமைக்கிறான். வெற்றியோ வெற்றி. இனிமையான-குளிர்த்- தியான-தெவிட்டாத தாளங்கள். இவனே விளையாட்டுப்- பிள்ளை. உலகமெல்லாம் இவன் விளையாட்டுப் படைப்பு, இத்தனையும் உலகை உய்விக்கவே. கோபன் என்ற வார்த்தைக்கு ரக்ஷகன் என்று பொருள். அதற்காகவே இவ்வேஷம். இங்கிருந்து அவன் செய்வது அகிலபுவன ரக்ஷை.

இவன் விஷ்ணு. இவன் கையில் சங்கு அல்லவோ தங்க வேண்டும். அங்கு தங்கியது வேணு. அதரஸீதுநா ஆப்யாயயஸ்வந: என்று வேண்டினர். மதுசூதன் வாயமுதம் பன்னாளும் உண்கின்ற சங்கின் பங்கில் ஏற்பட்டதுபோலும். சங்கு அமுதம் குடித்து சிலரைக் குலைக்கும். இதுவோ தானும் குடித்து வெற்றிகொண்டு விளங்கும், வெற்றியைக் காட்டுவது சங்கநாதம், இங்கு வெற்றியடைந்தது வேணு என்பது ரஸம்.

லலிதவ்ருத்தியை அடைந்தது புல்லாங்குழல், இதுக்கு இவ் வ்ருத்தியை சிக்ஷித்தது யார் ? ஹஸ்த தாளங்கள் என்கிறார். தாள சுத்தி இருந்தால் தான் வேணுவிற்குப் பெருமை. மெல்லிய கரங்கள் தாளம் சேர்க்கின்றன. காதைத் துளைக்காத தான ஒலி. இன்பத்தில் மிதக்க வைக்கும் மெல்லிய தாளம். கானரஸிகர் தம்மையே மறந்து தாளம் போட ஆரம்பித்துவிடுவர்.

வல்லவனுயிருப்பினும் வல்லவிகள் (இடைச்சிகள்) அமைக்கும் தாளத்துக்கு அடிபணிந்தது வம்சநாளம், இது தோல்வியல்ல, வெற்றியே என்கிறார். அங்க அசைவுகள், புருவ நெரிப்புகள் இவைகள் அழகாக அமைந்து விட்டால் இதை லலித வ்ருத்தி என்பர். கண்ணனிடம் பாவம், குழலில் ராகம் கைகளில்தாளம், இது ஒரு பரத நாட்டியமோ!

சிறு விரல்கள் தடவிப்பரிமாற செங்கண் கோடச் செய்ய வாய் கொப்பளிப்ப என்ற நிலைதான் என்னே ! தாளங்கள் அமைப்பவர் பலர். கைகளால் தயிர் கடையும் பொழுது ஏற்பட்ட தாளம் இனிமையானது. இங்கு கைகளாலேயே தாளம் அமைந்து விட்டது. மெய் மறந்து தாளம் போடும் பொழுது சிறு தவறு ஏற்பட்டாலும் கைவளையல்கள் விரிசல் அடைந்து விடுகின்றன. சில சமயங்களில் அவை ஆத்மத்யாகத்தையே செய்து கொள்கின்றன போலும். அவ்வாறில்லாமல் அவை உரோசுகின்றன. ஹஸ்த தாளத்துக்கு ஏற்ற பின்னணி மென்மையில் மேன்மை, இனிமை குளுமை.

கும்மியடித்தலும் கோவியர் இனத்தில் உண்டே ! இங்கு அதற்கு கீதம் அமைக்கின்ருன் போலும்.

இங்கு விஷ்ணு கோப வேஷத்தில். இடையர்களின் உடுப்பு தொழில் ஒன்றுக்கும் குறைவில்லை. அகில புவன ரக்ஷணம் தான் கோபநம். அதற்காக கோப வேஷம் ஏன் கூடாது ? எவ்வளவு வேஷம் போட்டாலும் விஷ்ணு என்ற நிலையை மறைக்க முடியவில்லையே.

ஒரு சாதாரணமான முழிங்கலின் துண்டு என்ன பாக்யம் செய்ததோ ! அதராம்ருதபானத்தில் பங்கு கொண்டு விட்டதே. வல்லவிகளோடும் போட்டியில் வெற்றி. சங்குடனும் போட்டியில் வெற்றி, பிராட்டிமார்களின் போட்டியில் வெற்றி, அதராம்ருதத்தில் பங்கு கொள்ளும் ஸௌபாக்யம் தாளம் போடுவோருக்கும் கிடைக்க வில்லையே. இதஞல் தான் வம்சநாள: ஜயதி என்கிருர்.

**चित्राकल्पः श्रवसि कलयन् लाङ्गलीकर्णपूरं ।**
**बर्होत्तंसस्फुरितचिकुरो बन्धुजीवं दधानः ।**
**गुञ्जाबद्धामुरसि ललितां धारयन् हारयष्टिं**
**गोपस्त्रीणां जयति कितवः कोऽपि कौमारहारी**

**சித்ராகல்ப: ச்ரவஸி கலயந் லாங்கலீ கர்ணபூரம்**
**பர்ஹோத்தம்ஸ ஸ்ப்புரித சிகுரோ பந்துஜீவம் ததாந:**
**குஞ்ஜாபத்தா முரஸி லளிதாம் தாரயந் ஹாரயஷ்டிம்**
**கோபஸ்த்ரீணும் ஜயதி கிதவ: கோபி**
**கௌமாரஹாரீ (17)**

லாங்கலீ கர்ணபூரம் ச்ரவஸி கலயந், பர்ஹோத்தம்ஸ ஸ்புரித சிகுர: பந்துஜீவம் (ஹஸ்தேரததாந: உரஸி லலிதாம் குஞ்சாபத்தாம் ஹாரயஷ்டி தாரயந், கோப- ஸ்த்ரீணாம் கௌமார ஹாரீ சித்ராகல்ப: கோபி கிதவ: ஜயதி என்று வரிசையில் பொருள் கொள்ள வேணும்.)

இதற்கு முந்திய ச்லோகத்தில் விஷ்ணுவின் கோப- வேஷஸ்ய என்றார். அங்கு வெற்றி புல்லாங்குழலுக்கு. இங்கு கோபவேஷம் எப்படி அமைந்துள்ளது என்பதனை அத்புதமாக கூறுகிறார். கானகமெல்லாம் திரிந்து கரிய திருமேனி வாடி ஆயர்பாடிக்கு எழுந்தருளும் கொள்ள மாளா இன்பவெள்ளத்தில் மூழ்காதவரிலரே !

எம்பெருமான் எவ்வண்ணம் தோன்றினும் அழகனே. இப்பொழுது அவனது கோபவேஷம் எப்படி பொருந்தியுள்- ளது. அகில புவன ரக்ஷணத்திற்காக அவன் எந்த வேஷமும் ஏற்பான். ஸ்ரீ சுகர் இவ்வழகில் ஈடுபட்டார். அழகான ச்லோகம் அவதரித்தது. அந்த ச்லோகத்தை இங்கு அறிய வேண்டாமோ ! -

பர்ஹாபீடம் நடவரவபு: கர்ணயோ : கர்ணிகாரம்
பிப்ரத் வாஸ: கனககபிஶம் வைஜயந்தீம் ச மாலாம்.
ரந்த்ரான் வேணோ: அதரஸுதயா பூரயந் கோபப்ருந்தை:
ப்ருந்தாரண்யம் ஸ்வபதரமணம் ப்ராவிசத் கீதகீர்த்தி:

இதை அடியொத்தி குலசேகரப்பெருமாளும் - வடி வழகில் ஈடுபட்டு பாடுகின்றார்.

மங்கல நன்வனமாலை மார்வில் இலங்க மயில் தழைப்பீலிசூடி
பொங்கிள வாடை யரையில் சாத்திப் பூங்கொத்துக்
காதிற்புணாப்பெய்து
கொங்கு நறுங்குழலார்களோடு குழைந்து குழலினிதூதி வந்தாய்
எங்களுக்கே யொருநாள் வந்தூத உன் குழலின்னிசை போதராதே.

இதில் பெருமாள் சாத்துப்படியை கவனிக்க வேண்டும். இத்துறையில் ஸ்வாமி தேசிகன் கோபவேஷத்தில் கிடக்கும் பாங்கினை இங்கு பேசுவர்.

சித்ராகல்ப: ஆகல்ப: என்பது வேஷத்தை. விசித்திர- மான வேஷமன்றோ இது. பதுமையில் எழுத முடியாத புதுமை இவ்வேடத்தில். செவியில் வெள்ளைப்பூ இரண்டு காதுகளிலும் என்றார். அவர் ஒரு காதில் என்கிறார் ஸ்வாமி. நீலோத்பலம் என்று சிரீஷ குஸுமம் என்றும் இதற்கு பெயர். கர்ணாபரணம். மயில் கண்

ஒச்சி நிற்கிறது. அது முன்னுச்சிமயிர்களின் சோபையை பன்மடங்காக்குகிறது. திருக்கரத்தில் பந்து ஜீவனை ஏந்திக் கொண்டார். இதை ஐபா குஸுமம் என்பர். ஒரு மலரின் பெயரில் பூர்த்தியிருக்கிறது. மற்ற தெர்ரு பூவில் ஜீவன் இருக்கிறது. பந்துரிவ ஜீவயதி ரஸாதிநா எனப் பட்டது. இனத்தை வளர்க்கும் பெருமையுடையது பந்து ஜீவன். இது சிவந்த நிற முடையது. பத்ம ஹஸ்தனை கண்ணன் இவ்வேஷத்துக்கு ஏற்ப இம்மலரினை கையில் ஏந்தினன் போலும். ச்ரவணத்தில் வெள்ளைப்பூ ஹஸ்தத்தில் சிவந்த பூ. குஞ்சாபத்தாம் உரஸி லலிதாம் - திரு மார்பில் குந்து மணிமாலை, விலையில்லாத மாலை இப்பொழுது உண்மையில் விலையில்லாததாகி விட்டது. வைஜயந்தி மாலையின் இருப்பிடத்திலேயே குந்து மணிமாலை. இடையர்கள் இலவசமாகப் பெற்று பரவசமாக அணியும் மாலை! குந்து மணியின் இரண்டு நிறம் பாதி கருப்பு- பாதி சிகப்பு: பலமாலைகளைச் சுமந்து வனமாலியானவன் அழகான குந்து மணியை மாலையாகக் கோர்த்துச் சாத்திக் கொண்டிருப்பான். இடையர் வழியில் நின்றவன் அவர்களது பழக்க வழக்கத்தை விடலாமோ! ஹாரயஷ்டி: என்பதற்கு யஷ்டிவத் முஷ்டிமேயம் என்றனர். ஹாராவளி என்பதாம். இரண்டு சொல்லுக்கும் அதிகபேதமில்லை. திருமார்பில் குந்து மணிமாலை மனதைக் கவருகிறது. கண்ணனுக்கு எது தான் அழகைத் தராது!

இவன் இவ்வாறு வேஷம் போட்டான், யாரையோ ஏமாற்றத்தான் இந்த வேஷம். கோபஸ்த்ரீகளைக் கவர்ந்து விட்டான். கிதவன், அடாததைச் செய்பவன், இவனுடைய கிதவம் யாருக்குத்தான் வரும்! துஷ்டன் என்றே அழைக்கப்படுகிறன். அதிலும் ஒரு பெருமையா! மதுப கிதவபந்தோ மாஸ்ப்ருசாங்யம் ஸபத்ந்யா: என்று இவர் பெயர் ப்ரஸித்தமாகிவிட்டது. இவனருளையே நினைந்து சூழும் இடைச்சிகள் கிதவ யோஷித: க: த்யஜேத் நிசி என்றும் அழைத்தனர். கைதவத்தைப் பெருமைபட அனுபவித்தனர் ஆழ்வார்களும் - இதோ.

கருமலர்க்கூந்தல் ஒருத்திதன்னைக் கடைக்கணித்து, ஆங்கே ஒருத்திதன்பால் மருவி மனம் வைத்து, மற்றொருத்திக் குரைத்து, ஒரு பேதைக்குப் பொய் குறித்து, புரிகுழல் மங்கையொருத்தி தன்னைப் புணர்தி. அவளுக்கும் மெய்யன் அல்லை - மாயைதானே என்பது ஒன்று போதுமே இவனது கைதவத்தையறிய. காலிப்பின்னே வருகின்ற கடல் வண்ணன் வேடத்தை வந்து காணீரே என்று தானே பெரியாழ்வார் அழைத்தது.

கோபஸ்த்ரீணும் கௌமாரஹாரீ கொமாராவஸ்தையில் வெகுஅழகாக விளங்குபவன், கோபஸ்த்ரீலோலன், விலக்ஷணமான வேஷக்காரன், கௌமாராவஸ்தையில் இருக்கும் ஹரி பிறரின் கௌமாராவஸ்தையை அப- ஹரித்து விட்டான். அவர்கள் யௌவநாவஸ்தையைப் பெற்றுவிட்டார்கள். கௌமாராவஸ்தையில் தானிருந்து கொண்டே யௌவனாவஸ்தையை அடைந்து கிதவ- ஞகிருன். காதில் பூ, கையில் பூ, மார்பில் மாலே, இது இவ்வேஷத்தில் முக்கியமான அம்சங்கள் போலும். குந்து மணிக்கு மார்பில் குந்தும் பாக்யம் கிடைத்து விட்டதே, அதஞல் தான் குந்து மணி பொன்ஃனயும் மதிப்பிடத்தக்க பெருமை பெற்று விட்டது போலும்.

இவன் சித்ராகல்பன். விசித்திரமான வேடம். இவ்வன- சாரீ வனத்தில் கிடைத்தவைகளேயே தனக்கு அணிகல- மாகக் கொண்டுவிட்டான். கிதவன் பிடிபடுவான். ஆஞல் இவன் இவ்வண்ணம் வெற்றிவாகை சூடுகிருன் என்கிருர். முன் ச்லோகத்தில் புல்லாங்குழல் வெற்றி பெற்றது என்ருர். இங்கு கிதவன் வெற்றியடைந்து விட்டான் என்கிருர். அபிநயம் பிடிப்பவனேப் பிடிக்காது என்பாரில்லேயே. இவன் பிடித்த கிதவாபிநயம் வெற்றிபெற்றுவிட்டது. கௌமாராவஸ்தையில் யௌவநாநுபவம் போலும் !

**लीलायष्टिं करकिसलये दक्षिणे न्यस्य धन्यां**
**अंसे देव्याः पुलकरुचिरे सन्निविष्टान्यबाहुः ।**
**मेघश्यामो जयति ललितो मेखलादत्तवेणुः**
**गुञ्जापीडस्फुरितचिकुरो गोपकन्याभुजङ्गः**

**லீலாயஷ்டிம் கரகிஸலயே தக்ஷிணே ந்யஸ்யதன்யாம்**
**அம்ஸே தேவ்யா: புளகருசிரே ஸந்நி**
**விஷ்டாந்யபாஹு:**
**மேகச்யாமோ ஜயதி லளிதோ மேகலா தத்தவேணு:**
**குஞ்ஜாபீடஸ்ப்புரித சிகுரோ கோபகந்யா புஜங்க: (17)**

மேகச்யாம: குஞ்ஜாபீடஸ்ப்புரிதி சிகுர:

தக்ஷிணே கரகிஸலயே தந்யாம் லீலாயஷ்டிம் ந்யஸ்ய, புளகருசிரே தேவ்யா: அம்ஸே ஸந்நிவிஷ்டாந்யபாஹு: லலித: மேகலாதத்தவேணு: ஜயதி, என்று சேர்த்துப் பொருள் கொள்ள வேணும்.

பூமியைக் காக்க வந்தவன் விலக்ஷணமான பூமிகையை ஏற்கிறான், ஹரி என்ற திருநாமத்துக்கு ஏற்ப கௌமாரத்தை அபஹரித்து விட்டான். கௌமாரத்தில் யௌவநம் புகுந்து விட்டதே! கண்ணன் எதிலும் தோல்வி கண்டதில்லை. அவனை அடைந்தவர்களுக்கும் தோல்வி இல்லை. எல்லாமே வெற்றி மயம். அவன் கிதவனாய் இருந்தாலும் வெற்றியே. வேஷம் மிக மிகப் பொருத்தம் என்றார். வேஷத்தை ஏற்றுத்தானே ஆகவேண்டும்.

எம்பெருமான் திருமேனிப்பொலிவு தான் என்னே. ஆளவந்தாரிடம் செல்வோமா! உதக்ர - நாம்ஸ - விலம் பி குண்டலாலகாவலீ பந்துர கம்புகந்தரம், ப்ரபுத்த முக்தாம் புஜசாருலோசநம் ஸவிப்ரமப்ரூலதம் உஜ்வலாதரம், ஶுசிஸ்மிதம் கோமல கண்ட முந்நஸம் லலாடபர்யந்த விலம்பிதாலகம் ஸ்புரத் கிரீடாங்கத ஹார கண்ட்டிகா மணீந்த்ர காஞ்சீகுணநூபுராதிபி: ரதாங்க ஶங்காஸிகதாத நுர்வரை: லஸத்துலஸ்யா வநமாலயோஜ் வலம். இத்தகைய திருமேனியில் இன்று எத்தகைய வேஷம்! காஞ்சீ குண நூபுராத்யபரிமிததிவ்யபூஷணன் இன்று இந்த வேஷத்தில் ஸேவை ஸாதிக்கின்றான்.

லீலாயஷ்டியை தளிர் போன்ற திருக்கரத்தில் வைத்துக் கொண்டான். விளையாட்டுக்கு என அழகான தொரு கோல். இவன் தண்டதரன், ஆனால் இது அழகுச் சிறுகோல். செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாயிற்றே! சங்கம் பிடிக்கும் தடக்கைக்குத் தக்க நல் அங்கமுடையதோர் கோல் கொண்டுவா, என்றும், கோலப்பிரானுக்கு ஓர் கோல் கொண்டுவா என்றும் தானே பெரியாழ்வார் கண்ணனுக்கு கோல் வரவழைத்தது. அங்ஙனன்றிக்கே இவனே விளையாட ஏற்ற கோல், அக்கோலை கையில் வைத்துக் கொண்ட நிலை. கோல்தான் என்ன பாக்யம் செய்ததோ! வலது திருக்- கரத்தை அடைந்ததே. கோல் தன்யமாயிற்று.

இது ஊன்று கோல் அல்ல, ஊறுவிளைவிக்கும் கோலு மல்ல. விளையாட்டுக்கோல் என்கிறார். மெல்லியதான கரத்தில்

மெல்லியதான கோல். இவ்வேஷத்துக்கு ஏற்ற கோல், ஏற்றம் தரும் கோல். கையில் எடுத்துக் கொண்டு என்ளுமல் வைத்து என்கிருர்.

தேவியின் என்கிருர். அத்தனை ஆயர் சிறுமியரில் இவளுக்குத் தான் தனிப் பட்டம். தேவி என்ருல் விளையாட்டுக்குரியவள் அல்லது ஏற்றவள். மிகவும் அழகாய் இருப்பவள். கண்ணனுக்கு மிகவும் அந்தரங்க- மானவள். நப்பின்னை தான் காளைகளை அடர்த்த காளையாகித் தானே அவளை மணந்தது. அவளுடைய தோளில் தோள் கண்டார் தோளே கண்டார் என்னலாம் படியான நப்பின்- னையின் தோளழகில் ஈடுபட்டார். மற்ருெருகரத்தை அவளது தோளில் பதியவைத்தார். பரமபுருஷனின் கரஸ்பர்சம் ஏற்பட்டால் உடலில் கிளர்ச்சி. புல்லரித்து விட்டது. பரவசமாளுள் அவ்வண்ணமே சமைந்து விட்டாள். புல்லரிப்பதிளுலும் அழகு கூடுகிறது. ஆசையோடு அழுத்தினகை, கோலை ஏந்தும் பொழுது வலது கை தளிர் போன்றிருந்தது. ஆலிங்கம் செய்யும் இடது கை பருத்துபாஹுவாக இருக்கிறது என்பது ரஸம். ஸந்நிவிஷ்ட: என்ற இடத்தில் ஸந் என்பது தான் அழுத்தத்தைக் காண்பிக்கும். இரண்டு அடிகளாலும் திருக்கரங்களின் வ்யாபாரங்கள் கூறப்பட்டன.

மேகச்யாமன் கருமுகில் போலுருவன், ஊழி முதல்வன் பருவம் அது தானே ! மேகம் பொழிந்தவுடன் வெளுத்து விடும். இவன் அவ்வாறன்றே. மின்னுமாமழை தவழும் மேகவண்ணு என்றிறே அனுபவம்.

திருக்கரத்தில் லீலாயஷ்டி, மற்ருெரு கரத்தால் அணைப்பு. புல்லாங்குழல் மேகலையில் அமர்த்தப்பட்டு விட்டது. இடுப்பில் சாற்றியிருக்கும் ஒட்டியாணத்தில் வேணுவுக்கு இடம் அமைந்து விட்டது. பாதி மறைந்ததும் பாதிவெளியிலும் தோன்றுகிறது. ஸுபகா மேகலா என்று தானே வழங்குவது. மேகலையில் வேணுவின் சேர்த்தி, அன்றியும் அழகான கொண்டை. அங்கு குந்து மணிகளால் அலங்காரம். குந்து மணிக்கும் பரப்ரகாசகத்வம் வந்து விட்டதே ! குந்துமணியின் கருப்புபாகம் மேலே. சிகப்பு பாகம் கீழே. அதற்கடியில் முன்னுச்சிமயிர்கள். குடிலகுந்தளம் என்பதே. ஆபீடம் கொண்டை, குந்து மணிக் கொண்டை, திரு முடியின் பரபாகாதிசயம் இதுவே. இத்தகைய அழகன் கோபகன்னிகளின் விடளுகை ஆகிவிட்டான்.

प्रत्यालीढस्थितिमधिगतां प्राप्तगाढाङ्गपालिं
पश्चादीषन्मिलितनयनां प्रेयसीं प्रेक्षमाणः।
भस्त्रायन्त्रप्रणिहितकरो भक्तजीवातुरव्यात्
वारिक्रीडानिबिडवसनो वल्लवीवल्लभो नः

ப்ரத்யாலீடஸ்த்திதிமதிகதாம் ப்ராப்தகாடாங்க பாளிம்
பஸ்சாதீஷந் மிளிதநயநாம் ப்ரேயஸீம் ப்ரேக்ஷமாண:
பஸ்த்ராயந்த்ரப்ரணிஹிதகரோ பக்தஜீவாது ரவ்யாத்
வாரிக்ரீடா நிபிடவஸநோ வல்லவீவல்லபோ ந: (19)

ப்ரத்யாலீட ஸ்திதம் அதிகதாம் ப்ராப்தகாடாங்கபாளிம், பஸ்சாத் ஈஷன்மிலித நயநாம் ப்ரயஸீம் ப்ரேக்ஷமாண: பஸ்த்ராயந்த்ரப் ரணிஹித கர: வாரிக்ரீடாநிபிட வஸந: வல்லவீ வல்லப: ந: அவ்யாத் என்று வரிசைப்படுத்திப் பொருள் கொள்ள வேணும்.

வில்லாளி போன்ற நிலையில் இருப்பவளும், இருக அணைக்கப்பட்டவளும் பின்புறம் சிறிது பார்வையை செலுத்தினவளுமான காதலியை அன்போடு கண்டவனும் துருத்தியில் நீர் பீச்சுவதற்காக கைகளைவைத்துக் கொண்டு நீராட்டத்தினால் நனைந்து அடர்ந்த ஆடையுடைய பக்தர்களின் உயிராக இருக்கும் இடைச்சிகளின் நாதனுன கண்ணன் நம்மைக் காப்பாற்றட்டும். என்று கருத்து.

இந்த ச்லோகத்தில் வாரிக்ரீடைரஸிகனின் அழகான லீலையை வர்ணிக்கிருர். ஜலக்ரீடை என்பது அந்தப்புரத்தில் நடைபெறும் ரஸமான விளையாட்டு. நீரில் அமர்ந்து நீராடுவது ஒருவகை, ஆற்றங்கரையிலோ ஓடைகளிலோ காதலி யோடு களித்து பீச்சாங்குழலால் நீரைப்பீச்சி ஒருவரையொருவர் நனைத்து நனைத்து மகிழ்ந்து ஆடுவது மற்ருேர் வகை.

யமுநாதீரத்தில் இப்படியொரு யௌவனவிஹாரம். அகர்மவச்யன் பண்ணும் ஆனந்த விஹாரம். ஆடைகளை நனைப்பதும், ஸாகூதமாகப் பார்த்து களிப்பதும் இவ்வாட்டத்- தின் உயிர்நாடி. குழலூதினன், திரண்டது அணங்கின் திரள். இனி ரஸனைப் பெற்ருல் ரஸிகர்களின்

யௌவனம் கொள்ளைப் போகாதோ! அரங்கம் தயாராகிவிட்டது. தொடக்கப் பெருமை பெண்ணுக்குத்தானே! ஒருத்தி அவள் தான் ஆசைக்கிழத்தி இடது காலை முன்னேயும் வலது காலைப் பின்னுமாக உதைத்தாப் போல் நிற்கிறாள். வில் எய்தும் பொழுது வில்லாளன் எவ்வண்ணம் நிற்பனோ அப்படி யல்லவோ நிற்கிறாள். ஸாக்ஷாந்மன்மத மன்மதன் மீதும் அம்பு (அன்பு) செலுத்தப்போகிறாள் போலும். இதைத் தான் ப்ரத்யாலீட நிலை என்பது. வில்லாளிகளுக்கு ஐந்து விதமான நிலைகள் உண்டு, ப்ரத்யாலீடம், ஆலீடம் ஸமபாதம், வைஶாகம் மண்டலம் என்பவை அவை.

இவள் ப்ரத்யாலீட ஸ்திதியை அடைந்திருக்கிறாள். பீச்சான் குழலினால் கண்ணன் மீது நீரைப் பாய்ச்சி விட்டாள். மற்றொருத்தியைக் குறி வைத்து இந்த நிலையில் பீச்சான் குழலும் கையுமாக நிற்கிற அழகுதான் என்னே! இது ரஸத்தினால் (ஜலத்தினால்) ஏற்படும் க்ரீடை ஜலத்திலும் க்ரீடை உண்டு.

இந்த நிலையில் பின் புறமாக வந்து அவளை அழுத்தமாக அணைத்துக் கொண்டு விட்டான் கண்ணன். அங்கபாளி என்பதற்கு ஆலிங்கனம் என்று பொருள்.

கண்ணனின் திருக்கரஸ்பர்சம் யாருக்குத் தான் கிடைக்கும். ப்ராக்ருதமான கரமல்லவே! கூச்சமிருப்பினும் இதை இழக்கலாமோ! இது ப்ராப்தமாயிற்று. பின்புறமாகக் கண்பார்வையும் உடன் கூடிவிட்டது. அதுவும் கொஞ்சம் தான். இவனிடம் தான் அவனுக்கு கொள்ளை ஆசை- யாயிற்றே. அன்புக்களஞ்சியத்தினை நோக்குகிறான். அவளுடைய பாதி நோக்கு இவனுடைய நோக்கு பூரணம், ஊன்றிப்பார்க்கிறான். ஆதலால் ஈஷன்மிலத நயனையை பூரணமாக பார்த்துக் கொண்டேயிருப்பவனாய் என்கிறார். ப்ரேக்ஷமாண ஏவ-என்று கொள்ள வேண்டும். ரஸம் தொடர்ந்தால் தான் ரஸம். ரஸஸ்வரூபனை எம்பெருமான் தொடங்குகிறான். பஸ்த்ராயந்த்ரம் தயாரித்தான். உள்ளே உள்ள காற்றினைத்துரத்துமானதால் இதை துருத்தி என்பர். நீரையும் உட்கொண்டு கை கொண்டு அழுத்தினால் அது பீரிட்டிக் கொண்டு வரும். ஒரே சமயத்தில் பலர் முகத்திலும் பீச்சலாம் போலும். அது யந்த்ரமாகி விட்டது. அதில் ப்ரணிஹித கர: என்கிறார். முன்னம் ஸந்நிவிஷ்டாங்யபாஹு: என்றார் இப்பொழுது ப்ரகர்ஷேண - நிஹித - கர: என்கிறார். கண்ணன்

செய்வதெல்லாம் ப்ரக்ருஷ்டமே. ப்ர-ஈக்ஷமாண: என்றார். ப்ரணிஹிதகர: என்கிறார். இவன் பக்தஜீவாது. பக்தர்களுக்கு ஜீவன ஔஷதமாக இருப்பவன். அவன் நம்மைக் காக்கட்டும்.

வாரிக்ரீடாநிபிடவஸந: என்கிறார். இது என்ன திருக்- கோலம்! வேஷ்டி முற்றுமாக நனைந்து விட்டது. திருமேனியோடு ஒட்டிக் கொண்டு விட்டது. ஸ்வாபாவிக மான திருமேனிப்பொலிவினைக் காட்டும் திருமேனியை அழுத்தமாகத்தழுவிக் கொண்டது. விஷ்ணுதே தநூம் ஸ்வாம் என்ற ச்ருதி எவ்வளவு அழகாக இதைக் கூறியுள்ளது. ஈரவாடை ஸேவைதான் என்னே!

இவன் வல்லவிகளுக்குத் தான் வல்லபனுகி விட்டான். வாரிக்ரீடையில் இவனை வரிக்காத ஜீவனும் இருக்க இயலுமோ! வாரியில் (அம்பஸ்யபாரே) இருப்பவனுக்கு வாரிக்ரீடையில் வ்யாமோஹம். தாபத்ரயாதுரர்களை வாரிக்- ரீடை தான் வாழ வைக்கிறது.

**वासो हृत्वा दिनकरसुतासन्निधौ वल्लवीनां**
**लीलास्मेरो जयति ललितामास्थितः कुन्दशाखाम्।**
**सव्रीडाभिस्तदनु वसने ताभिरभ्यर्थ्यमाने**
**कामी कश्चित् करकमलयोरञ्जलिं याचमानः**

**வாஸோ ஹ்ருத்வா திநகர ஸுதா ஸந்நிதௌ**
**வல்லவீநாம்**
**லீலாஸ்மேரோ ஜயதி லளிதாமாஸ்த்தித: குந்தமாகாம்**
**ஸவ்ரீடாபிஸ் ததநு வஸநே, தாபிரப்யர்த்த்யமாநே**
**காமீ கஸ்சித் கரகமலயோரஞ்ஜலிம் யாசமாந : (20)**

**திநகரஸுதாஸந்நிதௌ வல்லவீநாம் வாஸோ ஹ்ருத்வா லலிதாம் குந்தசாகாம் ஆஸ்தித : ததநு ஸவ்ரீடாபி: தாபி: வஸநே அப்யர்த்யமாநே கரகமலயோ: அஞ்சலிம் யாசமாந: லீலாஸ்மேர: கஸ்சித் காமீ ஜயதி, என்ற அடைவில் பொருள் கொள்ள வேண்டும்.**

சூரியன் மகளான யமுனேயின் அருகில் இடைச்சிகளின் வஸ்திரங்களை அபஹரித்து அழகான கடம்பமரத்தின் கிளையில் அமர்ந்த வனாய் பிறகு வெட்கமடைந்த அப்பெண்களால் வஸ்த்ரங்களை ( திருப்பிஅளிக்கும்படி) வேண்டப்பட்ட- வனாய் செந்தாமரை பூப்போன்ற அவர்களது இரண்டு கைகளேயும் கூப்புதலாகிற அஞ்சலியை யாசிப்பவனாய் விளையாட்டுச் சிரிப்புடனே ஒரு காமுகன் வெற்றிவாகை சூடுகிருன் என்று கருத்து.

விரிவுரை : ந விவஸந: ஸ்நாயாத் என்ற தர்ம சாஸ்த்ர மறியாதவர்கள். அறியாத இடைச்சியர் என்று பேர் பெற்றவர்கள். இதமும் தெரியாது இத்தமும் தெரியாது. இந்த வல்லவிகளைக் காக்கத்தான் இந்த அவதாரம். பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறப்பு. அல்லது வளர்ப்பு, ஸ்காலித்யே ஶாஸனம் பண்ணுவது ஆசார்ய லக்ஷணம். இவனே கீதாசார்யனுகப் போகிருன். இங்கு சிக்ஷிக்கும் முறையே அலாதி. அதிகாரிக்கு அனுகுணமான சிக்ஷை. லகு சிக்ஷைதான் கருணேதான் இந்த சிக்ஷைக்கு அடி. இங்கு நிக்ரஹ ஸங்கல்பம் இல்லே. அனுக்ரஹ ஸங்கல்பமே. அநாசாரத்தை முளேயிலேயே அகற்ற வேண்டும். மார்கழி நீராட்டத்துக்கு தகுதி தூயோமாய் வருவது தானே. இப்பெண்களுக்கு உள்ளத்தூய்மை உண்டு. புறத்தூய்மையும் வேண்டும். ஆதலால் இப்படித் திருத்திப்பணி கொள்வது, ஆடையில் தான் நாட்டம். அதை அபஹரித்தான். வஸ்த்ராபஹாரம் குற்றம் தானே ! மதீயம்ச நிகிலம் என்னுமாப்போலே வஸ்த்ரமும் அவனதே. திருப்பிக் கொடுக்கத் தான் எடுத்தது. சிக்ஷிப்பதற்குத் தான் எடுத்தது. எடுத்தவன் குற்றவாளியல்ல. ஹரிர் ஹரதி என்பதற்கு ஏற்ப இச்செயல். இங்கு ஒன்றை அவன் அபஹரித்தான் எனப்படுகிறது. இந்த ஆயன் மாயன் யோகேச்வரன் ஒன்றை இவன் தொட்டதும் அத்தனே வஸ்த்ரங்களும் கிளேகளே அடைந்து விட்டன. என்னே இவன் மாயை ! ஜாத்யேக வசனம் என்பதை விட இதில் சுவை உண்டு. ஹர்தும் கும்பே எனப்பட்டது முன்பு. இங்கு ஹ்ருத்வா எனப்படுகிறது. அங்கு கைவண்ணம் அவனுடையது. இங்கு வல்லவிகளின் கைவண்ணம் கோரப்படுகிறது. அங்கு ஸ்வகரவ்யாபாரம். இங்கு பிறரின் கர வ்யாபாரம். திநகரஸுதாஸந்நிதி. சூரிய கிரணம் பட்டும் உணர் வில்லாதநிலே. ஒரு பெண்ணின் ஸந்நிதியிலா பெண்கள் இவ்வாறு நடந்து கொள்வது. புனித ஸ்தலத்தில் அபவித்ர வ்யாபாரமா ! கர்ம ஸாக்ஷியின் ஸந்நிதியிலா இந்நிலே ! ஸந்நிதியிலே தவறு செய்யலாமா

! நிசாகரன் ஸந்நிதி- யாலுல் அவ்வளவு குற்றமில்லையே, காமுகனின் வ்யாபாரம் தொடங்குமே !

இவன் லீலாஸ்மேரன். தனது விளையாட்டைப் பார்த்தால் தனக்கே நகை ஏற்படுகிறது. இதுவும் ஒரு லீலையா ! எவ்வளவு பெரிய லீலைகளைச் செய்தவன் நான், இந்த சிறிய புத்தி தனக்கேன் ஏற்பட்டது என்று தனக்குத் தானே சிரித்துக் கொள்கிருன். இவன் பகுலீலன். இவனுக்கு அதில்தான் பொழுது போக்கு. சிறுமிகளிடமா நம் விளையாட்டு என்று எண்ணினுன். லலிதமான கிளை. இவனுக்கு ஆஸனமாயிற்று. பாங்குடன் அமர்கின்ருன். மரத்துக்கு ஏற்பட்ட பாக்யம் தான் என்ன ! யமுனையாற்றங்- கரையில் நான் கடம்பமரம், அல்லது குந்த மரமாக வாவது பிறக்கமாட்டேனு என்று எங்கும் நிலை இம்மரத்துக்கு உண்டே. மூலமும் இவனே, மரமும் இவனே, மரத்தில் கிளையுமிவனே ! இப்பொழுது ( சாகையில் ) கிளையில் அமர்ந்தது பெருமை. இம்மரம் இப்பொழுது புடவை காய்க்கும் மரமாகிவிட்டதே. இவன் பணி முடிந்து விட்டது. இதில் வெற்றிபெற்று விட்டான். ஆதலால் ஜயதி என்கிருர். இங்கு ஒரு ரஸமும் உண்டு, அபகரித்தவன் ஓடுவது வழக்கம், இங்கு இவன் ஓடவில்லை. தனக்காக அபஹரிக்க வில்லை. யுவா ஸுவாஸா : என்னப்பட்டவனுக்கு வஸ்த்ரம் தேவை யில்லை. இது ஒரு சிக்ஷை, ஒரு லீலை, இவன் விளையாட்டுக்கு எல்லை இல்லை. இன்னும் முற்றும் இன்னும் முற்றும் என்று சொல்வார் இங்கு இல்லையே.

இனி என் செய்வது ! இவனை வசப்படுத்த ஒரு வழி தான் உண்டு. ப்ரார்த்தனை தானே அது. பாதிக்கப்பட்ட நாம் அனைவரும் ப்ரார்த்திப்போம் என்பது நல்ல முடிவு தான். அவன் ஏற்க வேண்டுமே ! வெட்கமறியாத பருவமும் கடந்து விட்டதே ! நாணி யினையோர் கருமமில்லை என்ற நிலையும் கூடவில்லையே ! நாணம் மடம் அச்சம். என் செய்வது. நாச்சியார்திருமுகப்பாசுரமே வேண்டுவது. இது என் புகுந்தது இங்கு ! ஒருத்தி கூறினுள், மற்ருெருத்தி இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய் என்ருள். எல்லே ; ஈதென்ன இளமை ; பொல்லாங்கு ஈதென்றறியாய், இரக்கமேல் ஒன்று மிலாதாய், குரக்கரசாவது அறிந்தோம், என்பர். கோலச் சிற்ருடை பலவும் கொண்டு என்ருள். படிற்றை எல்லாம் தவிர்த்து என்பார், நீதியல்லாதன செய்தாய் என்பாள், மகிமையிலீ என்பாள். இவ்வாறு சாடினும், பவ்யமாய் பட்டைப்பணித்தருள வேண்டும் என்பது அவனுக்கும் புரிந்துவிட்டது.

அவர்கள் கேட்பதெல்லாம் ஆடையே. அவன் தர மறுப்பதும் அதையே. மடுவிலே மங்கைகள் மரத்திலே மாதவன், எங்கள் பட்டைதான் வேண்டுகிறோம். பட்டில் மாற்றம் இருந்தாலும் பாதகமில்லை. யாருடைய சிற்றுடை எது என்று யோசிக்காதே கண்ணா ! நாங்கள் தவிக்கின்றோம். எங்கள் உடலை மூடிக்கொள்ளவேண்டும். இது வன்றி வைகுந்தமும் யாம் வேண்டோம். கேட்டதைக் கொடுப்பது உனது ஸ்வபாவமில்லையோ இது அணங்- குகளின் அப்யார்த்தனை.

இனி எங்களால் தாங்க இயலாது என்றதைக் கேட்ட வனுக்கும் மனது தாங்கவில்லை. நான் ஒன்று உங்களைக் கேட்கிறேன், அதற்கு ஸம்மதித்தால் உடனே பாவாடை- களைப் பெற்றுவிடலாம் என்றான் அவ்விடன். என்னமோ ! என்று ஏங்கியிருக்க நீங்கள் கைகளைக் கூப்பினால் தருவில் இருப்பவன் தருவேன் என்றான். இது எப்படி ! உங்கள் கைகள் தாமரைப்பூ போன்றவைதானே அவற்றை இணையுங்கள். பிறகு ஆடைகளை அணியுங்கள். இதைத் தானே ஏற்க முடியாது. நஷ்டம் யாருக்கு ! மானம் பெரிது மங்கையர்க்கு, மானம் பெரிது மாதவனுக்கு, யாராவது ஒருவர் இறங்கினால் தான் இந்த வ்யவஹாரம் முடியும் ! கைகளைத்தூக்கி அஞ்சலி செய்ய வாய்ப்பில்லை. அந்தர்யாமியான கண்ணன், நான் வேணுமா ஆடை வேணுமா என்றான். நீர் வேண்டும் என்று சிலரும் நீரில் ஆடைதான் வேண்டும் என்று சிலரும். அவதாரத்தில் தான் ரஹஸ்யம். எம்பெருமானுக்கு ஏன் இந்த பிடிவாதம். எனக்கு பக்ஷபாதமேயில்லை. நான் எல்லோரையும் தானே கை கூப்பச் சொல்கிறேன் என்றான். கை கூப்பாமல் போனால் இதுக்கு முடிவில்லை. இதை ஏன் இந்த சிறுமிகள் உணர வில்லை. வியந்தான், வியர்த்தான், கடைசியாக, உங்களுக்கு நான் வேண்டுமா வேண்டாமா ! வேண்டுமானால் வழி தெரியாத உங்களை நான் வேண்டிக் கொள்கிறேன். நீங்கள் கை கூப்பாவிட்டால் எனக்கு ஒரு குறையும் இல்லை. நான் அவாப்த ஸமஸ்தகாமன். எனக்கு உங்களைப் போல் ப்ராக்ருத காமம் இல்லை. நீங்கள் நலம் பெறத்தான் நான் இதைச் செய்தேன். தவறு செய்தவர்கள் என்னை அடைய முடியாது. உங்களுக்கு விளங்கவில்லையே. நீங்கள் ஒரு அஞ்சலி செய்து விடுங்கள். நான் நீங்களிட்ட வழக்காக இருப்பேன். புத்ர ஹிதார்த்தாய த்வாம் உபேத்ய அபியாசதே என்றார் வான்மீகி. நான் உங்களின் நன்மைக்காகவே உங்களை யாசிக்கிறேன்

என்ருன். நாணியினியோர் கர்மம் இல்லை அஞ்சலி செய்தனர். அவனையே நீராக்கி விட்டனர்.

இவ்வண்ணம் விலக்ஷணமான இந்த காமீ வெற்றி யடைந்து விட்டான் என்கிருர். இது க்ருஷ்ணனுக்கு வெற்றியா; பெண்களுக்கு வெற்றியா, அஞ்சலிதான் வெற்றிபெற்றது. ஏன் ! எங்கு கண்ணன் இருக்கிருனே அங்கு நமக்கும் வெற்றிதானே ! எல்லோரும் ஒருவனைப் பார்த்து ஒன்றை வேண்டுவர். கண்ணனும் எல்லோரையும் பார்த்து ஒன்றை தான் வேண்டுவான். அவர்கள் ப்ரார்த்திக்கின்றனர். இவன் யாசிக்கிருன். ஆற்றங்கரையில் வஸ்திரங்களை அபஹரித்தவன் தன் பழிதீர ஒரு சபையில் புடவையையே வட்டியும் முதலுமாக கொடுத்தானே !

इत्यनन्यमनसा विनिर्मितां
वेङ्कटेशकविना स्तुतिं पठन् ।
दिव्यवेणुरसिकं समीक्षते
दैवतं किमपि यौवतप्रियम् ॥ 21 ॥

இத்யந்நயமநஸா விநிர்மிதாம்
வேங்கடேசகவிநா ஸ்துதிம் படந்
திவ்யவேணுரஸிகம் ஸமீக்ஷதே
தைவதம் கிமபி யௌவதப்ரியம்

இந்நூலை இயற்றியவர் யார் என்பதும், அவரது நிலை என்ன என்பதையும், இந்நூலைப் படித்தால் கிடைக்கும் பயன் என்ன என்பதையும் விளக்கும் ஸ்ரீஸுக்த ச்லோகம்.

வேறு விஷயத்தில் சொல்லாத மனதை யுடையவனுல் என்பது உற்று நோக்கத்தக்கது.

அநந்யா: என்பதற்கு கண்ணனைத் தவிற வேறு எவரை யும் நாடாதவர்கள் என்று பொருள். கண்ணன் காட்டிய வழியில் நிற்பவர்கள். மந்மநா பவ என்ருன் கண்ணன். மய்யேவ மந ஆதத்ஸ்வ என்றும் கூறினுன். அவ்வாறிருப்- பவன் தான் நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்வம் நஅம்சய: என்றும் கூறினுன்.

அநந்யா : சிந்தயந்தோ மாம்-என்றும் அபயப்ரதானம் பண்ணினுன். விஷ்ணுசித்தர் ஒருவர் அநந்யமனஸ்கராய் விளங்கினுர். விஷ்ணு சித்தர் தான் க்ருஷ்ணசித்தர். பாலக்ருஷ்ணுநு பவத்துக்குத் துறையாய் விளங்கியவர் இவரே. பிள்ளைத் தமிழ் பாடியவர் இவரே, பிள்ளைப் பருவலீலைகளையே மெய்யமாகக் கொண்டு அருளிச் செய்யப்பட்டது தான் இந்த கோபால விம்சதி. விஷ்ணுசித்தரால் முன்னம் கூறப்பட்டது. இப்பொழுது வேங்கடேசனுல் இயற்றப் பட்டது என்பது ரஸம்.

இந்த ஸ்துதி நிர்மாணிக்கப்பட்டது என்கிருர். கட்டப் பட்டது என்பது வீடு - கோயில் என்பன போன்றதாகவே இருக்கும். ஆனுல் இங்கு துதி நிர்மாணிக்கப்பட்டது என்பது எங்ஙனே ! அன்றியும் வி-நிர்மிதாம் என்பதையும் கவனிக்க வேண்டும். விசேஷமாக - ஈடுபாட்டுடன் பார்த்துப் பார்த்து அழகாக அமைக்கப்பட்டது என்பது ரஸம். அநந்ய மநஸா விநிர்மிதாம் என்பதிலும் விசேஷம் உண்டு. அவதானத்துடன் ஒரே நினைவுடன், நிர்மாணிப்பதில் பெருமை அதிகம். மிக மிக அழகாக இருக்கும் என்று காண்பிக்கப்பட்டது. வேங்கடேசன் கண்ணனுனுன். ஆனுல் இப்பொழுது தன்னைப் பாடிக்கொள்ள கவியானுன். என்னைக் கொண்டு தன்னைத்தான் பாடிக் கொண்டான் அவன் என்று பூரிப்பர் நம்மாழ்வார். இன் கவி பாடும் பரம கவிகளில் ஒருவர்தான் என்பதை மறைமுகமாகக் காட்டித் தருகிருர். க்ருஹநிர்மாணம் என்பதுபோல் க்ரந்த நிர்மாணம் என்ற வ்யவஹாரமும் உண்டு. அத்யாத்மக்ரந்தநிர்மாணம். என்பதை நினைக்க வேண்டும். ஸ்வாமியின் அத்புதஸ்தோத்ர க்ரந்த நிர்மாணம் இது. தான் கட்டின கட்டிடத்தைப் பார்த்துத்தானே மகிழ்வது போலவே இந்த ஸ்துதியைக் கண்டு உள்ளம் பூரிப்பர் போலும்.

படத என்று ஹயக்ரீவஸ்தோத்ரத்திலும், ரகுவீர கத்யத்திலும், அபீதி ஸ்தவத்திலும். படந்தி, படந்த: என்று வேகாஸேதுவிலும், ஸ்ரீஸ்துதியிலும், பன்மையில் பேசப் பட்டது. கோதாஸ்துதியில் மட்டும் வக்தி என்று ஏகவசனத்தில் கூறப்பட்டது. அவ்வண்ணமே இங்கு படந் என்று ஏகவசனம் இடம் பெற்றது. கஸ்சிந் மாம் வேத்தி தத்வத: என்ற கணக்கில் பெருமை கொண்டது என்று கொள்ள வேண்டும். மேலும் படித்தாலே போதும் என்றும் கூறியதாம்.

இங்கு அநந்யமநஸா என்கிறதை வேங்கடேசேந என்பதுடன் சேர்ப்பது போலவே, படந் என்பதுடன் சேர்க்க வேண்டும். ஏனோ தானோ என்று படிக்காமல் ஆழ்ந்து ஊன்றி மனதை வேறு எங்கும்

செலுத்தாமல் ஏகாக்ரதையுடன் படிப்பவன் நிச்சயமாக வேணு கோபாலனை நேரிடையாக ஸேவிக்கலாம் என்று அருளிச் செய்கிறார்.

எம்பெருமான் ரஸ ஸ்வரூபன். அவன் ச்ருதிரஸன், த்ருஷ்டிரஸன், ரஸநாரஸன். ( ஆழ்வார்கள்படி) அவன் க்ராணரஸன். அவன் ஸ்பர்சரஸன், ஆனால் அவனை இங்கு ரஸிகன் என்கிறார். அவன் சொன்னதெல்லாம் கீதை. அவன் ஸாமவேத கீதன். இங்கு திவ்ய வேணுரஸிகன் என்கிறார். இவனுடைய வேணுகானம் விலக்ஷணம். இவனே தயாரித்ததாகையால் இது திவ்ய வேணு, தன்னையே மறந்து இவன் வேணுகானம் பண்ணணும்போது ப்ரக்ருதியே ( உலகமே ) தன்னை மறந்தது, தன் செயலை மறந்தது. தனது நிலையை மறந்தது. பெண்ணினம் படாத பாடு பட்டது. அவனை அண்டியது. ரஸிகன் ராஸக்ரீடை பண்ணினான். உலகம் பெரும்பேறு பெற்றது.

திவ்ய வேணுநாதத்தை தானே ரஸிக்கிறான் என்கிறார். அவனுக்கு ஏற்பட்ட ச்ரவணானந்தம் பிறர் பெறுவதிலும் சீரியதே. நன்றாக ஸேவிப்பான் என்கிறார். ஈக்ஷதே என்றால் பார்க்கிறான் என்று பொருள். ஸம்-ஈக்ஷதே என்றால் நன்றாகப் பார்க்கிறான் என்பர் போலும். ததைக்ஷத என்ற ஈக்ஷணம் தான் ஜகத்காரணம் ப்ரம்ஹம் என்று நிர்ணயிக்க உதவியது. ஆனால் தமது ஈக்ஷணம் ஸமீக்ஷணமாகிறது. நாம் கண்டுகளிக்கவே தான் அவன் ஊதியது. நம் கண்டது அவன் க்ருஷி பலித்தது என்று அவனுக்கே ராஸிக்யத்தை அதிகரிக்கும் போலும். ஆதலால் இது ஸமீக்ஷணம். தான் கண்டால் தானே பிறரைக் காணச் செய்ய இயலும் என்கிற கேள்வி எழலாம். நிசாமயாமி, அவலோகயாமி என்று தான் ஸேவித்ததைக் கூறினார். கண்டு சொன்னவரின் ஸ்ரீஸூக்தியைப் படித்தால் நாமும் காணலாம் என்கிறார் போலும். படன் என்று பரஸ்மை பதத்தில் தோன்றிய சொல், ஸமீக்ஷதே என்பது ஆத்மநே பதத்தில் உள்ள தாது. இதன் ரஸத்தையும் இங்கு அனுபவிக்க வேண்டும்.

தைவதம் கிமபி எத்தகையது என்று அறிய முடியாது. அநிர்வசநீயமான தைவதம். என்னை ப்ரம்ஹமாக நீங்கள் பாவிக்க வேண்டும் என்று கர்ப்பக்ருஹத்திலேயே ஆணை யிட்டவன் இவன். பிரமன் முதலானவர்களால் கர்ப்ப க்ருஹத்திலேயே துதிக்கப்பட்டவன், கோப ஸ்த்ரீகளாலும் ந கலு கோபிகா நந்தநோ பவாந் என்று கூறப் பட்டவன். ஆதலால் கிமபி என்கிறார். இத்துதியிலும் கிமபி ப்ரம்ஹ என்றார். அவைமி பரம் புமாம்ஸம்

என்றார். விச்வ கோப்தா என்றார். மஹ: என்றார், மஹஸே என்றார். கோப வேஷஸ்ய விஷ்ணோ: என்றார் ஆதலால் இங்கு தைவதம் கிமபி எனப்பட்டது. யௌவதப்ரியம் யுவதிகளுக்கு ப்ரியமானவனே என்று பொருள். யுவதிகளின் கூட்டத்தை யௌவதம் என்பது. பெண்கள் கூட்டம் என்பதாம். யௌவதப்ரியம் என்று தேரும். இது ரஸம், திவ்ய வேணு ரஸிகன் யௌவத- ப்ரியனானது என்னே அழகு. பெரியாழ்வாரின் அனுபவத்தைச் சிறிது பார்ப்போம்.

நாவலம் பெரிய தீவினில் ஓர் அற்புதம் என்றார். நங்கை மீர்காள் என்றழைக்கின்றார். கோவலர் சிறுமியர் படும் பாட்டைக்கூறினார். மங்கைமார்கள் மலர்க் கூந்தல் விழ உடை நெகிழ என்கிறார், மேனகையோடு திலோத்தம் அரம்பை உருப்பசியாவர் வெள்கி மயங்கி என்கிறார் ஆதலால் இவன் யௌவதப்ரியன். வேணுகீதம் ஸ்மரோதயம் என்பர். அவதாரம் தொடங்கி இருபதுச்லோகங்கள். ஒவ்வொன்- றும் ரத்தினம். இந்த கோபால விம்சதியை ஸேவிப்பவன் ( படிப்பவன்) கண்ணனைத் திண்ணம் இக்கண்ணாலேயே ஸேவிப்பான் என்று பலச்ருதியுடன் இத்துதி முடிவடைகிறது.

இத்யனன்ய : கோபாலன் விஷயமான இருபது முடிந்தது. இது ஸ்துதி. இதைப் படிப்பவனுக்கு வேணு கோபால ஸாக்ஷாத்காரம் பலம். வேங்கடேசன் கவியானான். மன்மனாபவ என்ற நிலையைப் பெற்றான், மய்யேவ மந ஆதத்ஸ்வ என்ற ஆணையை ஏற்றான், த்யானத்துக்கு மனத்தூய்மை தேவை. திவ்யவேணு ரஸிகன், யௌவத ப்ரியன். இவன் ஸேவை பலம், அவனைக்காண அவன் கொடுத்த திவ்யசக்ஷுஸ் போலன்றி நான் கொடுத்த இந்த ஸ்தோத்திரம் உப ஸம்ஹர என்ற சொல்லைப் பிறப்பியாது. ப்ரத்யக்ஷமிவ தர்சிதம் என்றனர். அவலோகயாமி நிசாமயாமி என்ற தனது நிலை தம்மவர்க்கு மாகட்டும் என்று பிரார்த்தித்தபடியாம்.

कवितार्किकसिंहाय कल्याण गुणशालिने ।
श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ॥

கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாண குணசாலிநே
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம:

சுபம்

# கோபாலாஷ்டோத்தர சதநாமாவளி

( கோபாலவிம்சதியிலிருந்து தொகுத்தது )

ஓம் ஸ்ரீ ப்ருந்தாவனசராய நம:
வல்லவீஜந வல்லபாய
ஜயந்தீஸம்பவாய,
தாம்நே
வைஜயந்தீ விபூஷணாய
நிஜாங்க ரஸிகவாக்ப்ரஸமீக்ஷணாய
வக்த்ராரவிந்த விநிவேசிதபாஞ்சஜந்யாய
வரபுண்டரீக பத்தாஸநாய
வல்லவசக்ரவர்த்திநே
ஆம்நாயகந்திருதிதஸ்புரிதாதரோஷ்ட்டாய
ஆஸ்ராவிலேக்ஷணாய
அநுக்ஷணமந்தஹாஸாய
கோபாலடிம்பவபுஷே
குஹநாஜநநீப்ராணஸ்தநந்தயாய
பரஸ்மை பும்ஸே
அநிப்ருதாபரணாய
ஆகுஞ்சிதைகசரணாய
நிப்ருதான்யபாதாய
நிமந்த முகரததி நிபத்த தாலாய,
நாதாய
நவநீதநடாய
கும்பவிநிஹிதகராய
ஈஷத்ப்ரசலிதபதாய நம:
நாபகச்சதே
ந திஷ்ட்டதே
மித்யாகோபாய
நயனமீலநாய
விச்வகோப்த்ரே
வ்ரஜயோஷிதபாங்கவேதநீயாய
மதுராபாக்யாய
அநந்யபோக்யாய
வஸுதேவவதூஸ்தனந்தயாய
ப்ரம்ஹணே
கிசோரபாவத்ருச்யாய
பரிவர்த்தித கந்தராய

ஸ்மிதபுல்லாதரபல்லவாய
விடபித்வ நிராஸகாய
விபுலோலூகலகர்ஷகாய
குமாராய
நிகமாந்த ம்ருக்யமாணாய
யமளார்ஜுனத்ருஷ்டபாலகேளயே
விடபித்வ நிராஸகாய
யமுநாஸாக்ஷிகயெளவநாய
யூநே
முக்தி பதவ்யை
அடவீஸம்பதே
அம்புவாஹயந்த்யை
அருணாதரஸாபிலாஷவம்சாய
கருணாயை
காரணமானுஷாய
அநிமேஷநிஷேவணீயாய
அஜஹத்யெளவநாய
கலாபகலஹாயிதகுந்தலாய
கரணோந்மாதகவிப்ரமாய
மஹஸே
அநுயாயிமனோக்ஞ வம்சநாலாய
ஸபர்சித வல்லவீ விமோஹாபாங்காய
அநகஸ்மிதசீதலாபாங்காய
அனுகம்பாஸரிதம்புஜாபாங்காய
அதராஹித சாருவம்சநாலாய
மகுடலாம்பிமயூர பிஞ்ச்சமாலாய
ஹரி நீலசிலாவிபங்க நீலாய
அந்திம ப்ரயாண ப்ரதிபாயை
வ்ரஜாங்கனாபிலாஷபதாய
அபிலாபக்ரம தூராபிரூப்யவதே
முக்தசிகண்ட மண்டநாய
சில்பிலிகிதாய
மதநாதுர வல்லவாங்கநா வதநாம்போஜதிவாகராய
மஹஸே
மஹிதாய
அஞ்ஜநத்விஷே
விமுக்தவல்லவீவலயாபாஷித மஞ்ஜுவேணவே
வல்லவீஹஸ்ததாலாய

சிக்ஷித லலித வ்ருத்தயே
அகிலபுவனரக்ஷகாய
கோபவேஷாய
விஷ்ணவே
அதரமணிஸுதாம்சவம்சநாளாய
சித்ராகல்பாய
லாங்கலீ கர்ணபூரச்ரவஸே
பர்ஹோத்தம்ஸ ஸ்புரிதசிகுராய
பந்துஜீவம் ததாநாய
குஞ்ஜாபத்த ஹாரயஷ்டி தாரகாய
கோபஸ்த்ரீ கிதவாய
கௌமார ஹாரிணே
லீலாயஷ்டி கரகிஸலயாய
தேவ்யம்ஸஸந்நிவிஷ்டபாஹவே
மேகச்யாமாய
லலிதாய
மேகலாதத்தவேணவே
குஞ்ஜா பீடஸ்ப்புரித சிகுராய
கோபகந்யா புஜங்காய
ப்ரத்யாலீட ஸ்திதிப்ரேயஸீப்ரேக்ஷகாய
பஸ்த்ராயந்த்ர ப்ரணிஹிதகராய
பக்த ஜீவாதவே
வாரிக்ரீடா நிபிடவஸநாய
வல்லவீ வல்லபாய
வல்லவீ வாஸோ ஹர்த்ரே
லீலாஸ்மேராய
குந்தசாகாஸ்திதாய
காமிநே
அஞ்சலியாசகாய
அநந்ய மனோ பிஷ்டுதாய
வேங்கடேச கவிஸ்துதாய
திவ்யவேணு ரஸிகாய
தைவதாய
யௌவதப்ரியாய
வேணுகோபல பரப்ரம்ஹணே நம:

பகவதே வாஸுதேவாய நம:

